ஸ்ரீ:

# தொல்காப்பியம்

## செய்யுளியல்

நச்சினார்க்கினியருரை

உரையாசிரியருரையுடன்

ஸேதுஸமஸ்தானவித்வான்

ரா. இராகவையங்கார்

பரிசோதித்தது.




மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரசுரம் - ம.

மதுரை:

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1917.

ஸ்ரீ

# முகவுரை.

தொல்காப்பியம் என்பது தொல்காப்பியனாராற் செய்யப்பட்டதால் ரனும்பொருட்டு, இத்தொல்காப்பியனார் சமதக்கினிபுதல்வரென ம், திரணதூமாக்கினி என்னும் இயற்பெயரையுடையரென்றும், த்தியர் வடக்கணின்று தென்றிசைப்போதுகின்றபோது இவரை ன்கொடுபோந்தாரென்றும், நச்சினார்க்கினியர் பாயிரவுரைக்கண் ரைத்தார். அவர் தொல்காப்பியன் என்பதற்குப் பழைய காப்பியக் டியினுள்ளோனை என்று ஆண்டுக்கூறினர். இவற்றாற் றொல்காப் ன் என்பது இவர்குடிபற்றிவழங்கியபெயரென்றும், திரண மாக்கினியென்பது இவரியற்பெயரென்றும் தெளியலாகும். ணாருமறைமுதலாக வடமொழியிலுள்ள தொன்னூல்கள் பல ற்றினும் "காவியகுலம்" என்பதோர் பழையகுடிப்பெயர் வழங்கப் கின்றமை அம்மொழிவல்லார் கண்டறிப. காவியர் கவியின் வழி யரென்ப. கவி சுக்கிரனுக்கு ஒருபெயர். இவர் பிருகுமஹாருஷி மரபினராதலாற் பார்க்கவர் எனவும் வழங்கப்படுவர். சமதக்கினியும் அவர் புதல்வரும், பிருகுவம்மிசியராதலாற் பார்க்கவ ரென்றும், அவரே கவிவம்மிசியராதலாற் காவியர் என்றும் பெயர் றுப. வான்மீகிபகவானும் பாலகாண்டத்துப் பிருகுமஹாருஷி பத்தினியைக் "காவியமாதா" என்று வழங்கினர். காவிய மாதா என்பது காவியர்க்குத் தாய் என்றவாறு. இதனாற் சமதக்கினி ல்வரான திரணதூமாக்கினியின் குலம் காவியகுலமாதல் கண்டுணர ம். இது பழமைபற்றி விருத்தகாவியகுலமென்று வழக்குப்படு ன்று கருதலாகும். இது தமிழிற் றொல்காப்பியக்குடி என்று ங்கப்படும். இக்குடியிற்பிறந்துசிறந்ததனாற் குடிப்பெயரே பெயராக வழங்கப்பட்டதென்க. பனம்பாரனார்கூறியபாயிரத்தும் 'தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றி' எனக்கூறுதலால் தன் பெயர் குலப்பெயரேயாக விளக்கஞ்செய்தார் என்பதே கருத்தாதல் காண்க. இது முப்பாலாசிரியர் வள்ளுவர் எனப் பெயர்சிறந்தது [illegible].

இத்தொல்காப்பியனார் அகத்தியனார்மாணாக்கர் பன்னிருவருட் தலைவராவர். இதனை "அகத்தியர்வழித்தோன்றிய ஆசிரியரெல்லா ருள்ளுந் தொல்காப்பியனாரே தலைவரென்பது எல்லாவாசிரியருக் கும் ஒப்பவென்பது" என "வினையினீங்கி" என்னும் மரபியற் சூத்திர

வுரையிற் பேராசிரியர் கூறியதனானுணர்க. அகத்தியனார்க்குத் காப்பியனார்முதலாகப் பன்னிருபுலவர் மாணாக்கருண்டெ "மன்னியசிறப்பின்வானோர்வேண்டத்,தென்மலையிருந்தசீர்சா வான், றன்பாற்றண்டமிழ்தாபின்றுணர்ந்த, துன்னருஞ்சீ தொல்காப்பியன்முதற், பன்னிருபுலவரும்பாங்குறப்பகர்ந்த, வரும் புறப்பொருள்வெண்பாமாலைப் பாயிரத்தானுணர்க. இவர்காலம் இஃதென்று துணியப்படாதிருப்பினும் இறப்பு தென்பதுமட்டும் எல்லாருக்கும் ஒப்பதாகும். தொல்காப்பி ஆதியூழியின் அந்தத்தே இந்நூல்செய்தாரென்று நச்சினார்க்கி பொருளதிகாரக் கற்பியலுரைக்கண்கொண்டார்.

இவர், அகத்தியனார்செய்தருளிய தமிழ்முதனூலிலக் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும்பற்றி மிகவும் கிடத்தலான் அவற்றுள், தமிழுணர்ச்சிக்கின்றியமையாது இயற்றமிழ்ப்பகுதியை எடுத்துத் தொகுத்து எழுத்து, பொருள் என மூன்றதிகாரமாக்கி ஒவ்வோரதிகாரத்துக்குப் தொன்பதியலாகப்பகுத்து இருபத்தேழு இயலாகவைத்து லாகாவரும்பொருள்பொதிந்து நுண்மையொடுபுணர்ந்த ஒ வாய, சில்வகையெழுத்தின்செய்யுட்சூத்திரங்களாற் பல்வகை இத்தமிழுலகு பயன்கொள்ளுமாறு இந்நூலை இயற்றிய கடைச்சங்கத்தாருள், களவியற்பொருள்கண்டகணக்காயனார் நக்கீரனார் "இடைச்சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் யிற்றுத் தொல்காப்பியம்" என்றுராகலான், இவர் செய்தருளிய நூலின் தலைமையும் பழைமையும் நன்குணரலாம்.

இந்நூலுட்கூறப்பட்ட எழுத்து, சொல், பொருள் எனப் மூன்றனுள் முன்னைய இரண்டும் பொருளாராய்ச்சிக்கேஉபகாரப் நிற்றலால் பொருளதிகாரத்தின் மேம்பாடு இனிதுணரப்படும். ளதிகாரமேம்பாடு இறையனார்களவியல் முகவுரையானுந்தெ பொருளனைத்தும் நிலைபெற்றுவிளங்குதல் நல்லிசைப்புலவரியு பல்வகைச்செய்யுளின்கண்ணேயாமென்பது தெளியப்படுமாத செய்யுளிலக்கணவாராய்ச்சி பொருளதிகாரத்தே வேண்டப் தெனவுணர்க. இப்போது வழங்குகின்ற எழுத்து, சொல், ப அணியென்னப்பட்ட ஐந்திலக்கணங்களையும் ஒருவன் உற்றுணர செய்யுளின்கண்ணேயாதலாற்செய்யுளிலக்கண ஆராய்ச்சிதமிழு சிக்கு இன்றியமையாமை காணப்படும்.

இனி இத்தொல்காப்பியத்திற்கு உரையியற்றியவர் கல்லாடர், உரையாசிரியரிளம்பூரணவடிகள், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் எனப்பலராவர்.* இவருட் கல்லாடருரை சொல்லதிகாரத்திற்கேயுள்ளது; அதுவுங்குறையாகக் காணப்படுவது. உரையாசிரியரிளம்பூரணவடிகளுரை மூன்றதிகாரங்கட்கும் உள்ளது. பேராசிரியருரை பொருளதிகாரத்திறுதியியல் நான்கற்கு இப்போது உள்ளது. சேனாவரையருரை சொல்லதிகாரத்திற்கே உள்ளது; இவரதிகாரத்திற்குமட்டுமே இவருரையெழுதினரென்ப. நச்சினார்க்கினியருரை எழுத்ததிகாரத்திற்கும், சொல்லதிகாரத்திற்கும் பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல், உவமவியல், மரபியலென்னும் மூன்றியல்களொழிந்த ஆறியல்கட்கும் இப்போது காணப்படுகின்றது. இவற்றுள் செய்யுளியற்குக் கல்லாடர், சேனாவரையர் இருவர்நீங்கலாக உரையாசிரியர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் என்னும் மூவருரையிருத்த லறியப்படும். இம்மூவருரையுள் இதற்குமுன் ஸ்ரீமான் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களச்சிட்ட பொருளதிகாரத்துள்ள செய்யுளியலுரை நச்சினார்க்கினியருடையதன்றென்றும், பேராசிரியருடையதென்றும் யான் செந்தமிழ்ப்பத்திரிகைநடாத்தியகாலத்தில் அதன் முதற்றொகுதி முதற்பகுதி ஆராய்ச்சியில்விளங்க எழுதினேன். இங்ஙனமே அவரச்சிட்ட பொருளதிகாரமரபியலுரையும் நச்சினார்க்கினியரதன்றென்றும் பேராசிரியரதென்றும் செந்தமிழ் இரண்டாந் தொகுதிப் பதினொன்றும் பகுதிமுதற்கட் டெளிவித்தேன். அவற்றை விண்டுவிரிப்பிற் பெருகும். ஆண்டுக்கண்டுகொள்க. இவ்வாறே அவரச்சிட்ட பொருளதிகாரமெய்ப்பாட்டியலுரையும் உவமவியலுரையும் நச்சினார்க்கினியருரையல்லவென்பது தெரிகின்றது. பின்னர்க்கிடைத்த இவ்விரண்டியலும் அடங்கிய பழையதோரேட்டுமுகத்துப் பேராசிரியனுரை என எழுதியிருத்தலானும் இக்கருத்து வலியுறுகின்றது. அவரச்சிட்ட பொருளதிகாரவிறுதியியலுரை நான்கன்

* தஞ்சைச்சரஸ்வதிவிலாச புஸ்தகசாலைத் தமிழேடுகளுள் தொல்காப்பியச்சொல்லதிகாரவுரையேடு ஒன்றுள்ளது: அவ்வேட்டினிறுதியில் இவ்வோத்தினுட்சூத்திரமுட்பட்ட துரையினளவு கிரந்தவகையானறு நூற்றிருபது..........ஆத்ரேயகோத்திரத்தென எழுதப்பட்டுள்ளது. இதனாலவ்வேட்டிலுள்ளவுரை ஆத்திரேயன்பேராசிரியனுரை என்று துணியப்படுகின்றது. இவரே மரபியலுரையிற்கண்ட "வலம்புரிமுத்தின்" என்னும் பொதுப்பாயிரஞ்செய்த ஆத்திரேயன்பேராசிரியராவர்.

மூகத்தும்ஒருபடியாகக்காணப்படும்"இவ்வோத்துஎன்னபெயர்த்
தெனின்" என வினவிக்கொண்டு அதன்மேலுரைப்பது நச்சின
கினியர் வழக்கன்றென்பது தொல்காப்பியமுதற்கணுள்ள இருப
மூன்றியற்கும் ஈண்டுச்செய்யுளியற்கும் அவர் கூறும் உரைத்தொ
கத்தான் எளிதிலறியலாகும்.

இவற்றுட் செய்யுளியல் நச்சினார்க்கினியருரை இற்றைக்
பதினைந்துவருடங்கட்குமுன் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின்பொ
டுப் பழையதமிழ் ஏடுகள்தேடிச் சென்றகாலத்து ஆழ்வார்திருநகரி
கவிராஜகேசரி திருமேனிஇரத்தினகவிராயர்வழித்தோன்,
தாயவலந்தீர்த்தான்கவிராயர்வீட்டில் இரண்டு ஏட்டுப்பிரதி
கிடைத்தன. இவற்றுடன் திருமயிலைவித்துவான் சண்மு
பிள்ளையவர்கள் உதவிய தொல்காப்பியப்பிரதியினும் இச்செய்யுளி
நச்சினார்க்கினியருரை யிருத்தலைக்கண்டு அதனையும் ஒப்புநோக்
கொண்டு, இம்மூன்றுபிரதியுமே வைத்து இச்செய்யுளியலுரை
சிற்றறிவிற்கியன்றவரை பரிசோதிக்கப்பட்டதாகும். இந்நச்சின
கினியருரையுடன், ஆழ்வார்திருநகரித்தேவர்பிரான்கவிராயரவ
ளுதவியதும் இதுகாறும் அச்சிடப்படாததும் ஆகிய செய்யு
ளுரையாசிரியருரைப்பிரதி மிகவுஞ் சிதிலமடைந்திருந்ததனை அ
வேட்டிலுள்ளவாறே ஆராய்ந்துகொண்டு, இவ்விருரையினையும் இ
புத்தகவாயிலாக வெளியிடலாயிற்று.

இப்பதிப்புத்தொடங்கப்பட்டு நெடுங்காலமாக முற்றுப்பெரு
விருந்ததனைச், செந்தமிழ்ச்செல்வவேந்தரும் மதுரைத்தமிழ்ச்சங்க
தலைவரும் எம் அன்னதாதாவுமாகிய மாட்சிமைதங்கிய ஸ்ரீமா
ஸ்ரீ ராஜராஜேசுவரஸேதுபதிமஹாராஜரவர்கள் விரைவினிறைவேற்
மாறு பல்காலுந்தூண்டி, அதற்கு ஆவனசெய்துதவ, அதனானே இ
நூல் வெளிவந்ததாதலின், அவர்கட்கு என்றும் நன்றிபாராட்டு
கடப்பாடுடையேன். இச்செய்யுளியலுரைப்பிரதிகளை அன்புடனு
விய நல்லோர் பெருந்தகைமை என்னுலெஞ்ஞான்றும் மறக்கற்பா
தன்று. செந்தமிழ்ச்செல்வச்சேதுவேந்தரும் அவராதரிக்கு
மதுரைத் தமிழ்ச்சங்கமும் நீடூழிவாழ இறைவனருள்புரிக.

இங்ஙனம்,

ரா. இராகவையங்கார்,

ஸேதுஸம்ஸ்தானவித்வா

கடவுள் துணை

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

## அ.—செய்யுளியல்

## நச்சினார்க்கினியருரை.

---

மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ
யாத்த சீரே யடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை யெனாஅ
நோக்கே பாவே யளவிய லெனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை யெனாஅக்
கேட்போர் களனே காலவகை யெனாஅப்
பயனே மெய்ப்பா டெச்சவகை யெனாஅ
முன்னம் பொருளே துறைவகை யெனாஅ
மாட்டே வண்ணமொ டியாப்பியல் வகையி
னாறுதலை யிட்ட வந்நா லைந்து
மம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழைபெனாப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.

**என்பது** சூத்திரம். இவ்வோத்து செய்யுளது இலக்கணம் உணர்த்தி மையிற் செய்யுளியல் என்னும் பெயர்த்து: எனவே இவ்வோத்து நுதலி து செய்யுளிலக்கணமாயிற்று. பாயிரத்துள் 'வழக்குஞ் செய்யுளு மாயிரு தலி, னெழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்வல்' என்றமையான் தற்கு முன்னர்க்கூறிய அதிகாரங்களினும் இவ்வதிகாரத்தும்எல்லாம் வழ கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவனகூறி, அவ்விரண்டும்பற்றிச் செய்யுள்

நிகழுமாதலால் அச்செய்யுட்குரிய இலக்கணத்தையெல்லாம் இவ்வோ
ஞுட் டொகுத்துக் கூறுகின்றார் என்றுணர்க. இங்ஙனங்கூறவே, முந்
ய ஓத்துக்களோடு இயைபுடைத்தாயிற்று.

இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் ;—இவ்வோத்தினுள் யேந்
கின்ற செய்யுட்கு உறுப்பாவன இவையென்று அவற்றது பெயரும் மு
யும் தொகையும் கூறுகின்றது.

**இதன் பொருள்.** மாத்திரையென்றது எழுத்திற் குரித்தாக எழு
திகாரத்தோதிய மாத்திரைகள் தத்தம் அளவின் இறந்து பாவின் ஓ
வேறுபாடுகளையுணர்த்தி விராஅய் நிற்கும்நிலைமை: மாத்திரையென்றது
த்திரையளவை என்பதூஉம், எழுத்தியல் என்றது எழுத்தியல்வகையை
பதூஉம் மேலைச்சூத்திரத்தாற் பெறுக. எழுத்தியல் வகையென்றது எ
ததிகாரத்துக் கூறிய எழுத்துக்கள் செய்யுட்கியலும் வகையை. அ
கையென்றது இயலசையும் உரியசையும் என இருவகையாம் அசைக்
பாட்டினை. யாத்தசீர் என்றது பொருள்பெறத் தொடர்ந்து நிற்குஞ் சீ
எனவே அசையும் தனித்தனியே பொருள்பெறுவனவும் தனித்தனிப்
ருளின்றிச் சீராயவழிப் பொருள்பெறுவனவும் என இருவகையாம்; ே
சாத்தன் எனவரும். அடியென்றது அச்சீர் இரண்டும்பலவுந்தொடர்ந்
குறுப்பை. யாப்பென்றது அவ்வடிதொறும் பொருளேற்றுநிற்பச் செ
தோர் செய்கையை. மரபென்றது காலந்தொறும் இடந்தொறும் வழக்
திரிந்தவாற்றுக்கேற்ப வழுப்படாமற் செய்வதோர் முறைமையை.
தென்றது பாக்களைத் துணித்து நிறுத்தலை. தொடைவகையென்
எழுத்துஞ்சொற் பொருள்களை எதிரெதிர்நிறீஇத்தொடுக்கின்ற தொடை
பகுதிகளை. நோக்கென்றது மாத்திரை முதலிய உறுப்புக்களையுடை
ய்க் கேட்போர்க்கு நோக்குதல்படச் செய்தலை. நோக்குதல் - பயன்கோ
பாவென்றது இவ்வுறுப்புக்களையுடைத்தாய்ச் சேட்புலத்திருந்து சொல்
பொருளுந் தெரியாமல் ஒருவன் கூறியவழியும், இஃது என்னசெய்யுளெ
றறிவதற்கு ஏதுவாகிப் பரந்துபடச் செல்வதோரோசையை. அளவ்
என்றது அடிவரையறையை. திணையென்றது அகத்திணையும் புறத்தி
யும் அறியச்செய்தலை. கைகோள் என்றது அவ்வத்திணையொழுக்கம்
யச் செய்தலை. கூற்றுவகையென்றது அச்செய்யுட்கேட்டோரை இது
கின்றோரின்னோரென அறிவித்தலை. கூற்றிவை என்பது பாட்டமை
அஃது எண்ணிய மூன்றினையுந் தொகுத்ததாம். கேட்போர் என்றது
ஞர்க்குக்கூறுகின்றது இதுவெனத் தெரித்தலை. களனென்றது இயற்
புணர்ச்சியும் இடத்தலைப்பாடும் முதலியன உணரச்செய்தலை. காலவ
யென்றது முக்காலத்தும் திணைநிகழ்ச்சிக்கண்ணே பொருணிகழ்ச்சியுள

றலே. பயனென்றது சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்லே. மெய்ப்பாடென்றது சொற்கேட்டோர்க்குப் பொருள் கட்புலனாதலே. ச்சவகை யென்றது சொல்லப்படாத ஒழிபும் தழீஇக்கொள்ளச்செய்தலே: து கூற்றும் குறியும் எனவருதலின் வகையென்றார். முன்னமென்றது றுவாரையும் கூறக்கேட்டோரையும் குறிப்பான் எல்லோரும் கருதும்படி சய்தலே. பொருள் என்றது புலவன் றான்றோற்றிக்கொண்டு செய்வதோர் பாருண்மையை. துறைவகை யென்றது முதலுங் கருவும் முறைபிறழ்க் ாலும் இஃது இதன்பாற்படுமென்று ஒருதுறைப்படுத்தற்கேதுவாயதோர் ருவியுளதாகச் செய்தலே. மாட்டென்றது அகன்றும் அணுகியுங் கிடந்த பாருள்களைக் கொண்டுவந்து தொடராகக் கூட்டி முடித்தலே. வண்ண மென்றது ஒருபாவின்கண்ணிகழும் ஓசை விகற்பத்தை. எனஅ என்ற ல்லாம் எண்ணிடைச்சொல். ஏகாரங்கள் எண்ணுப்பொருட்டு. யாப்பி ல் வகையி னுறுதலேயிட்ட அந்நாலேந்தும் என்றது யாப்பிலக்கணப்பகுதி ரால் அவ்வண்ணத்தொடு கூறிய இருபத்தாறும் என்று. அம்மை........ பகுத்துரைத்தனரே என்றது அம்மைமுதலிய எண்வகை வனப்பொடும் ற்கூறிய இருபத்தாறுந்தொகுத்து முப்பத்துநான்குறுப்பாக்கி இம்முப் பத்துநான்கும் நல்லிசைப்புலவர் செய்யப்படுஞ்செய்யுட்கு உறுப்பாமென்று கூறி, அங்ஙனம் இலக்கணமே கூறிவிடாதே அவற்றைத்தாஞ் செய்தல் வன்மையினமைந்து சுவடுபட வகுத்த அவ்வத்துறையெல்லாம் போயினார் என்றவாறு.

செய்யுளுறுப்பெனக்கூறி வகுத்துரைத்தனரெனவே மாறுக. இருபத்தாறென்றும் எட்டென்றும் இருவகையாற் கூறுகைகூறியது, இருபத்தாறும் தனிநிலைச் செய்யுட்கு ஒன்றொன்றின்றி இன்றியமையாவாய் வருதலும், அவ்வெட்டும் பல செய்யுட்டொடர்ந்த தொடர்நிலைச்செய்யுட் கேபெரும்பான்மையும் உறுப்பாய்வருதலும், தனிநிலைக்கண் ஒரோவொன் றாயும் வருதலும் அறிவித்தற்கு என்க. இவ்வுறுப்புக்குறையாமற் செய்யுட் செய்வார் நல்லிசைப்புலவர் என்பதூஉம், அடிவரையறை கூறியவற்றிற்கே இவ்விலக்கணமென்பதூஉம், * அடிவரையறையில்லா நூன்முதலிய ஆறற் கும் திணைமுதலிய உறுப்பு ஆகா என்பதூஉம், அவற்றுள் நூலும் உரையும் ஒழிந்த நான்கும் செய்தார் இசைப்புலவராகார் என்பதூஉம் உணர்க. இனி நூலும் உரையும் செய்தாரும் நல்லிசைப்புலவர் என்பது பின்னர் அவற்றிற் கிலக்கணம் கூறும்வழி யுணர்க. உறுப்பெனவே உறுப்புடைச் செய்யுளும் அதன்கண் அடங்கும், உறுப்பினது ஈட்டம் முதலாதலின்.

---

* 'அடிவரை யில்லன வாறெனமொழிப' 'அவைதா, நூலி னான வுரை யினான......குறிப்பினான' என்பனவற்றானுணர்க.

இவ்வாசிரியர் தளையை உறுப்பாகக் கொள்ளாதது என்னையெனின் தளையாவது சீரினது தொழிலாய்ப் பாக்களின் ஓசையைத் தட்டு நிற்ப ந்ததாகும்; அவ்வாறின்றித் சீரினையும் ஆசிரியமெல்லாம் இருசீர்க் ளடியென அடியாகவே வகுத்துக்கொண்டாராதலின் தளையென வே றுறுப்பின்றாம். அன்றியும், தளையான் அடிவகுப்பாரும் உளராயினன் அதனை உறுப்பென்று கொள்ளவேண்டலது; அங்ஙனம் வகுத்துக்கொள் மையின் உறுப்பென்றது சீரது தொழிலாய் ஓசையைத் தட்டுநிற்பதொ ன்றன்றே கொண்டார். அதனை யுறுப்பென்பார்க்குச் சீரான் அடிவகுத் குற்றமாம். தொல்காப்பியரோடு ஒருசாலை மாணாக்கராகிய காக்கைப வியாரும் உறுப்பென்றார்; பிற்றோன்றிய காக்கைபாடினியார் முதலியோ கொள்வர்: அது பொருந்தாது.

இச்சூத்திரத்துட் கூறிய முறையே முறையாமாறு வருகின்ற சூ த்திரங்களின் பொருட்கிடையான் உய்த்துணர்க. வளப்பெட்டும் தனித்த வருமாறும் தம்முள் இயைபுடைமையும் ஆண்டுணர்க. இவ்வுறுப்பினை ரியன்குறியும் உலகத்தார்குறியுமாகக் கொள்க. இவற்றை உயிரில்ல கலைவயுறுப்புப்போற் கொள்க.

உ. அவற்றுள்

மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு
மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இது நிறுத்தமுறையானே மாத்திரையும் எழுத்தியலும் உணர்த்து ன்றது.

இ-ள். அவற்றுள் மாத்திரையளவும் என்பது முற்கூறியவற் மாத்திரையைச் செவிகருவியாக உணர்ந்துகொள்ளும் நிலையும். எழுத்திய வகையும் என்பது முற்கூறிய முப்பத்துமூன்றெழுத்தும் யாப்பிலக்கண திற்குப் பதினைந்துபெயரவாய் நடக்குங் கூறுபாடும். மேற்கிளந்தன்ன எ மனார் புலவர் என்பது எழுத்தோத்திற்கூறிய இலக்கணத்திற் பிறழாம வருமென்று கூறுவர் புலவர். எ-று.

ஈண்டு அளவென்றது எழுத்திலக்கணத்தில் எழுத்திற்குக் கூ மாத்திரைகள் தத்தம் ஓசைகளைப் புலப்படுத்தி நிற்குமாறு தொடர்புபடு வீராஅய் நிற்பச்செய்யும் நிலையை அளந்துகோடலை: என்றது "அளபி துயிர்த்தலு மொற்றிசை நீடலும்" (தொல்-எழுத்- நூன்- ௩௩) என்னு சூத்திரத்தானும் "குறுமையு நெடுமையு மளவிற் கோடலின்" (ஷை- ௭. மொழி- ௧௦) என்னுஞ் சூத்திரத்தானும் செய்யுட்குரிய ஓசைதருமெ

கார விறுவாய்' (தொல்-எழுத்-நூன்-அ) 'அ, இ, உ, எ' (தொ
'ஆ, ஈ ஊ, ஏ' (ஷை-ச) 'நீட்டம் வேண்டின்' (ஷை-கூ) 'அளை
குற்றியலிகரம்' (ஷை-உ) 'ஓரள பாகு மிடனுமா ருண்டே' (ஷை. மொ
உ.ச) 'வல்லெழுத்தென்ப' (ஷை-எழுத்-கக) 'மெல்லெழுத்தென்ப' (ஷை
'இடையெழுத்தென்ப' (ஷை-உ.க) 'உயிர்மெய்யல்லன' (ஷை-மொழி
என்பனவாம். அளபெடையிரண்டும் எழுத்தாந்தன்மை * மேலே
தும். இவற்றுட் குறிலும் நெடிலும் குற்றுகரமும அசைக்குறுப்பாம்.
ஏனைய அசைகள் வேறுபடாமையின் ஒற்று அசைக் குறுப்பாகா: ஒ
பெடைக்குறுப்பாம். நெடிலும், அளபெடையிரண்டும், உயிரும்,
மெய்யும், மூவினமும், ஐகார ஔகாரக்குறுக்கமும் தொடைக்குறுப்
குறிலும், நெடிலும், அளபெடையிரண்டும், மூவினமும், ஆய்தமும்
ணத்திற்குறுப்பாம். இவற்றை இயற்கையெழுத்துஞ் சார்பெழுத்தும்
இரண்டாகவும் வகுப்பர்.†

ங. குறினிலை நெடினிலை குறிலிணை குறினெடி
லொற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரு நிரையு மென்றிசிற் பெயரே.

இது நிறுத்த முறையானே அசை கூறுகின்றது.

இ-ள். குறிலும் நெடிலும் தனித்துவந்தும், குறிலிரண்டு இணை
வந்தும், குறிற்பின்னர் நெடிலிணைந்துவந்தும், பின்னர் இந்நான்கும்
ஒற்றொடு வருதலோடே பொருள்பெற ஆராய்ந்து நிரனிறை வகையால்
நேரசையும் நிரையசையும் என்று பெயர்கூறினார் ஆசிரியர். எ-று.

குறிலும் நெடிலும் தம்முள் மாத்திரையொவ்வாவேனும் அவ்
மாத்திரையை நோக்காது எழுத்தாந்தன்மைநோக்கி இரண்டற்கும்
வோரலகு பெறுமென்றார். இதுகுறிலிணைக்குங் குறினெடிற்கும் ஒ
நேரசை நிரையசை என்ற பெயர், ஆட்சியும் குணமும் காரண
பெற்ற பெயர். இரண்டெழுத்தாகாது ஓரெழுத்தாதலின்
தன்றே: அதனான் நேரிய அசை நேரசை என்றாயிற்று. 'உயிரில்லெ
மெண்ணப் படாஅ' (தொல்-செய்-சச) என்றலின் ‡எண்ணப்படா,

* செய்யுளியல் - கஎ, கஅ.

† சிறப்பெழுத்து உறுப்பெழுத்து எனத்தொகையும் செய்வர்
டாருங்கலவிருத்திகாரர்.

‡ 'எண்ணுப்படாத' எனவும் பிரதிபேதம்.

ள் பயன் படாது அசைந்துநிற்றலின் அசையென்னும் பெயரும் எய்
ம. இரண்டெழுத்துநிரைதலின் இணையசையென்னும் பொருள்பட
யசை யென்றாயிற்று*.

உதாரணம்;—அ, ஆ, அல், ஆல் எனவும், பல, பலா, புகர், புகார் என
வரும். ஒற்றுக்கள் எழுத்தாய் நின்று அசைக்குப்பெறுதற் குரியவல்ல
ன்பது மொழி மரபின்கண்ணே 'மொழிப்படுத் திசைப்பினும்' (உ0)
பதன்கட் கூறியவாற்றானுணர்க. குறில் நெடில் என எழுத்தாக
ற்றேனும் 'நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி' (௪௩-கூ0)
றதனால் நெடில் சொல்லாந்தன்மையும் 'குற்றெழுத் தைந்து மொழிநி
றிலவே' (௪௩-கக) என்றதனாற்குறிலும் †சிறுபான்மைசொல்லாந்தன்
யும்பெறுதும்; அன்றியும் ஒற்றுக் கூறினமையானும் பெறுதும். 'உள்
ர் தோழி' என நேரசைநான்கும் 'வரி வரால் கலா வகின்' எனநிரையசை
ன்கும் வந்தன. (௩)

ச. இருவகை யுகரமொ டியைந்தவை வரினே
நேர்பு நிரைபு மாகு மென்ப.

இது கூறுத அசைக்கூறுங் கூறுகின்றது.

இ-ள். இருவகை உகரமொடு என்பது குற்றுகர முற்றுகரங்களோடே.
யைவியைந்துவரின் எ-து மேற்கூறிய நேரசையும் நிரையசையும் பிளவு
படாது ஒருசொல்விழுக்காடுபட இயைந்துவரின். நேர்பும் நிரைபும் ஆகு
மென்ப எ-து நிறுத்தமுறையே நேரசையோடியைந்த குற்றுகரமும் அத
னோடியைந்த முற்றுகரமும் நேர்பசை எனப்படும்; நிரையசையோடு இயை
ந்த குற்றுகரமும் அதனோடியைந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும்.
று.

நேரின்பின் உகரம்வருதலின் நேர்பு: நிரையின்பின் உகரம் வருதலின்
நிரைபு என ஆட்சியும் குணமும் காரணமாகப்பெற்ற பெயராதல் மேற்
கூறியவற்றுட்காண்க.

---

* "இனி நேரசைநிரையசைகளைத் தனியசை, இணையசை என்பாரு
முளர்: என்னை? 'தனியசை யென்று மிணையசை யென்று, மிரண்டென
மொழிப வியல்புணர் தோரே' என்றார் காக்கைபாடினியார்" என்பது யாப்
பருங்கலவிருத்தி. (அசையோத்து-க)

† 'குற்றெழுத்தைந்தும்' என்புழி முற்றும்மை எச்சப்பட்டுநின்ற
தனக்கொண்டு தாமே நிறைந்துநின்று மொழியாதலில; சிலமெய்யொடு
கூடி நிறைந்துநின்று மொழியாம் எனவுரைப்பர்.

உ-ம். வண்டு, நாகு, காம்பு, மின்னு, நாணு, தீர்வு: நேரசைமூன்
பின்னும் இருவகை உகாரமும் வந்து நேர்பசையாயிற்று. குறிற் பின்
இருவகையுகாரமும் நேர்பசையாகாமை *மேற்கூறுகின்றார். வரகு, கு
மலாடு, மலாட்டு, இரவு, புணர்வு, உலாவு என நிரையசைநான்கின் பி
க்குற்றுகரமும், நிரையசைமூன்றின்பின்னர் முற்றுகரமும் வந்து நிரை
யாயிற்று. குறினெடி லொற்றின்பின் வந்த முற்றுகரம் உளவேற்கா
'குற்றிய லுகரமு மற்றென மொழிப' (தொல்-எழுத்-புணரி-எ) எ
விதியாற் குற்றுகரம் புள்ளிபெற்றுநின்றும் புள்ளிபெற்றஒற்றுப்போ
ஒடுங்கிநில்லாது தன்னான் ஊரப்பட்டமெய்யுந்தானும் அரைமாத்திரை
யின்றதேனும், அதன்றிசைத்தலின் ஒற்றென்றலுமாகாது ஒருமாத்
பெற்ற உயிர்போல அதன்றிசையாமையின் உயிரென வேறோரலகு
த்தலுமாகாது இதனைச்செயற்பாலதுவேறோரசையாக்குதலென நே
நேர்பசை நிரைபசை என வேண்டினார் ஆசிரியர். பின்னுள்ளோர் உ
பெறுமென்று கொண்டாரேனும் அவர்க்கும் அலகுபெறுமென்றுங் கொ
ளவேண்டியவாறும், தேமா, புளிமாவொழியக் காசு, பிறப்பு எனக்குற்
வீறாக வேறுதாரணங்கொள்ளவேண்டியவாறும் உணர்க; எனவே கு
ரம் அலகுபெறாவாயிற்று. வண்டு, கொண்டி என ஓசை ஒவ்வாமை (
கருவியாக உணர்க.

ஒரு மாத்திரைபெற்ற முற்றுகரம் நேர்பசை நிரைபசையாயே
னின்;—வண்டு வண்டு வண்டு வண்டு என்புழிப் பிறக்கஅகவலோசை மி
மின்னு மின்னு மின்னு என்புழியும்பெறப்படுதலானும், வெண்பாட்டு
வண்டெனக் குற்றுகரவீற்றானின்றுழியுங் ‡கோலு என முற்றுகர
னின்றுழியும் ஒத்தவோசையவாமாகலானும் அவ்வசைகளாயிற்று. §
'எழுத்தளவெஞ்சினும்...........மொழிப' (செய்-சுஉ) என்ற வி
பெறுதும்.

---

* செய் - ரு.

'முற்றுகரம் இரண்டசைப்பின்னும் வருங்காற் குறிலொற்றின்
னும் நெடிற்பின்னும் என நேர்பசைக்கு இரண்டல்லதாகாது. நிரை
கண்ணும் குறிலிணைப்பின்னும் குறினெடிற்பின்னுமல்லதாகாது.
ணம்—மின்னு, நாணு எனவும், உருமு, குலாவு எனவும்வரும். வாழ்வு,
என நெடிலொற்றின்பின்னும் முற்றுகரம் வந்ததாலெனின், அவை
எனவும், 'இக்காட்டிய நான்குமே ஆவன' எனவும் கூறுவர் பேராசி

‡ பேராசிரியர் "முற்றிய லுகர மொழிசிதைத்துக் கொளாஅ, நிற்ற
றே யீற்றடி மருங்கினும்' என்பதனுரையில் 'மருங்கு என்றதனால் ஈற்
கண்ணும் இறுதிக்கண்ணே முற்றுகரம் விலக்குண்டதெனக்கொள்க:
றார்க்குப் 'புலமலர்த் தாரகலம் புல்லு' எனவும் 'கண்ணுரக் காணக்—
எனவும் வருமாலெனின், அவை மரூஉவழக்கு என்க' எனக்கூறுவர்

குறிலிணை யுகர மல்வழி யான.

இது தனிக்குறிலாகிய நேரசைப்பின்னும் இருவகை உகரம் வந்து சையாதலை விலக்கினமையான் எய்தியது விலக்கியதூஉமாம். குற் குற்றெழுத்துப்போன்று அலகுபெறுமென்றமையின் எய்தாதது வித்த வழுவமைத்ததூஉமாம்.

இ-ள். குற்றெழுத்தோடிணைந்த குற்றியலுகரமும் முற்றியலுகரமும் ாதவிடத்தே முற்கூறிய நேர்பசையாவன; எனவே குற்றெழுத்தோ ந்த குற்றியலுகரமும் முற்றியலுகரமும் வந்துழி நிரையசையாம். எ-று.

இனி, 'உடம்பொடுபுணர்த்தல்' என்பதனாற் குறிலிணையெனக் குற் த்தையும் குற்றெழுத்தென வேண்டினமைபெற்றாம். உ-ம்;—ஞாயிறு து என ஓரசைப்பின்னர் வருகின்ற குறிற்பின்வந்தகுற்றுகரம் குற் ழுத்துப்போன்று குறிலிணையுகரமாய் அலகுபெற்றதேனும் குற்றுகர யென்று இலக்கணமல்லதோர் வழுவமைத்தவாறு. இங்ஙனம் குற்றுக எழுத்தளபெஞ்சுமெனவே, 'குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கி, ற்றிய னகரமிசை நகரமொடு முதலும்' (எழுத்-மொழி-௩௪) என விதி துந்தையென்னு முதற்கட் குற்றுகரம், எழுத்தளபெஞ்சிக் குற்றெழுத் போன்று அலகுபெறுதலுங் கொள்க. கரு, மழு இவை முற்றுகரநிரை சையாம். (௫)

௬. இயலசை முதலிரண் *டேனைய வுரியசை.

இது முற்கூறிய அசையை இருகூறுசெய்து அவற்றிற்கு எய்தாதது துவிக்கின்றது.

இ - ள். இயலசை முதலிரண்டு எ-து முதற்கண்ணின்ற நேரும் நிரை இயற்றிக்கொள்ளப்படாது இயற்கைவகையான் நின்றாங்குநின்று தலை தலின் இயலசை யென்றும்: ஏனைய வுரியசை எ-து ஒழிந்த இரண்டும் பற்றிக்கொள்ளப்பட்டுந் தொழில்செய்தற்குரியவாதலின் உரியசையென் ம் பெயராம். எ-று. அங்ஙனம் இயற்றுதல் சீருட் காண்க. (௬)

௭. தனிக்குறில் முதலசை மொழிசிதைத் தாகாது.

இஃது எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இ-ள். மொழி சிதைத்து எ-து பொருடந்து ஒற்றுமைப்பட்டு நிற்ப ர் சொல்லைப் பொருளைக்கெடுத்து: தனிக் குறில்-முதலெழுத்தைத் க்குறிலாக்கின்: முதலசையாகாது எ-து அது நேரசையாகாது. எ-று

* 'டேனை யுரியசை' எனவும் பிரதிபேதம்.

எனவே, பொருள்தந்து ஒற்றுமைப்பட்டுநில்லாது விட்டிசைத்து நிற்றுழி நேரசையாம் என்றவாறாயிற்று. புளிமா என்றவழிப் புளியென்றுமைப்பட்டுநின்ற சொல்லைச் சிதைத்து முதனின்ற பகர உகரத்தை நேரசையாக அலகிடப்படாது. இனி விட்டிசைத்து நேரசையாங்கால் குறிப்பு, தற்சுட்டு, வினா, சுட்டு என *ஐந்து பொருளின்கண் விட்டிசைத்து நேரசையாம். உதாரணம்;—

'வெறிகமழ் தண்புறவின் வீங்கி யுகளு
மறிமுலை யுண்ணாமை வேண்டிப்—பறிமுன்கை
அ உ மறியா வறிவி லிடைமகனே
நொ அலைய னின்னாட்டை நீ'

என்பது வெவ். அ உ என்பது அகரந்தன்னையே சுட்டுதலிற் றற்சுட்டு. 'அ ஆ விழந்தானென் றெண்ணப் படும்' (நாலடி-கூ) என்பது அருட்குறிப்பு. அ அவனும், இ இவனும், உ உவனும் என்பது சுட்டு. எ எவன் என்பது வினா. 'உரையிற்கோடல்' என்பதனான் ஐந்திடத்தும் விட்டிசை கொள்க; 'அ, இ, உ, எ, ஒ என்னுமப்பா லைந்தும்' (தொல்-எழுத். நூ) எனவரும். இவை மொழிசிதைத்துத் தனிக்குறிலாய் நேரசையவாறு காண்க.

அ. ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்.

இது குற்றியலிகரம் அலகுபெற்றும் அலகுபெறாதும்வரும் என்கின்றது.

இ-ள். குற்றியலிகரம் ஒற்றியற்று எழுத்தியற்று எ-து குற்றியலிகரமாவது ஒற்றியல்பினையுடைத்து: அதுவேயன்றி, எழுத்தியல்பினையும் உடைத்து. எ-று.

என்றது அலகுபெறாதவழி ஒற்றாம்: அலகுபெற்றவழி யெழுத்தாம் என்றவாறு. உ-ம்;—'குழலினி தியாழினி தென்ப' (திருக்குறள்) என ஆசிரியத்தளையாயும் 'அருளல்ல தியாதெனின்' (௸-உருசு) கலித்தளையாயும் வருதலிற் குற்றியலிகரம் அலகுபெறாது ஒற்றியற்று. "நினக்கி யாரோ மாகுது மென்று, வனப்பு நினக்கியா னுரைப்பக் மதி" என இக்குற்றியலிகரங்கள் அலகுபெறுதலின் எழுத்தியற்று.

* "இனி விட்டிசைக்கும் இடந்தான் மூன்றென்பது உரையிற்கோடல்; அவை 'அ ஆ விழந்தான்' எனக்குறிப்பின்கண் வருதலும், 'அ உ' எனச்சுட்டின்கண் வருதலும், 'நொ அலையல்' என ஏவற்கண் வருதலும் என விட்டிசைக்கும் இடந்தான் மூன்றெனப்பட்டது" என்பார் பேராசிரியர்.

ன் அதுவாம். '*சுரும்புலவு நறுந்தொடையலள், கலனளவு நலனளவெ னிலமொழிபீற்று மகரங்கெட நின்ற உகரம் முற்றுகரமாயின. இனி துள்ள தாகு மறிவு' (திருக்குறள்-௩௱௯௰) 'இன்னு தினியார்ப் பிரிவு ககூ௯அ)'கருமமே கல்லார்கட் டேர்வு' 'பேரறிவாளர் துணிவு' 'பாடறியு யிரவு' 'போற்றாதார்முன்னர்ச்செலவு' (நான்மணி-௧0) 'புன்கணுடை புணர்வு' (திருக்குறள்-௧௧௯௨) †'புனைமலர்த்தாரகலம் புல்லு' ‡'அரு மடவார்க்கருளு' 'கோலு' இவை யடியிறுதிக்கண் உரியசையாய் வாறு காண்க.

'நிற்றலின்றே' என்றதற்கு ஈற்றடிக்கண் நிற்றலில்லையென்று அவை முடியாவாம். இவை அசைக்கும் ஓசைக்கும் உறுப்பாம். உ என்ற உம்மையாற் குற்றுகரமும் §'சேற்றுக்கானீலம்' எனப்பு கொடாமனின்றவாறும் 'எய்போற்கிடந்தானென்னேறு' (வெண்-௨௨) என இறுதிக்கண் உரியசையாய் நின்றவாறுங்காண்க. நாகுண் பது குற்றுகரமாகாது.

---

* "பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து, தேர்ந்து தேர்ந்து சூசி ( வண்டு சூழ விண்டு நீங்கி, நீர்வாய்க் கொண்ட நீல மூர்வா, யூதை ( வாய, மதியேர் நுண்டோ டொல்கி மாலே, நன்மணங் கமழும் பன்ன( வமையேர் வளைத்தோ ளம்பரி நெடுங்க, ணிணையீ ரோதி யேந்தின முலே, யிரும்பன் மலரிடை யெழுந்த மாவி, னறுந்தழை துயல்வருஞ் ந்தேந் தல்கு, லணிநகை நசைஇய வரியமர் சிலம்பின், மணிமருள் வா வளரிளம் பிறைநுத, லொளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொ( முழவு முழங்கிய வணிநிலவு மணிநக, ரிருந்தளவு மலரளவு சுரும்புல ந்தொடையலள், கலனளவு கலனளவு நலனளவு நலனளவு, பெரு புணர்ந்தனை யென்பவஃ, தொருநீ மறைப்ப வொழிகுவ தன்றே." செய்யுளியலுரையில் 'இழைபு' என்பதற்கு உரையாசிரியர் எடுத்தே பாட்டு.

† இனமலர்க் கோதா யிலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு.

‡ மஞ்சுசூழ் சோலே மலேநாட மூத்தாலு
மஞ்சொன் மடவாட் கருளு. இவை யாப்பருங்கலவிருத்தி கோள் (௩௮).

§ சேற்றுக்கா னீலஞ்-செருவென்ற வேந்தன்வேல்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகய
லேற்றந் தொழில்வடிவு தம்முட் டுமொற்றம்
வேற்றுமை யின்றியே யொத்தன மாவேட
ராற்றுக்கா லாட்டியர் கண்—இஃது இன்னிசைப்பஃறொடை உரையாசிரியர் காட்டிய பாட்டு.

௧௦. குற்றிய லுகரமு முற்றிய லுகரமு
மொற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே.

இது உரியசைகள் ஒற்றுப்பெற்று நிற்குமென எய்தாததெய்துவித்து.

இ-ள். குற்றியலுகரமும் முற்றியலுகரமும்என்-து முற்கூறிய குற்றிய
கரமும் முற்றியலுகரமும். ஒற்றொடு..........பெறுமே எ-து வருமொழி
ல்லெழுத்துவரும்வழி வல்லொற்றோடு தோன்றி நிற்கவும் பெறும் எ-று.

உதாரணம்;—'சேற்றுக்கானீலம்' 'நாணுத்தளையாகவைகி' 'நெருப்
ச்சினந்தணிந்த' 'கனவுக்கொளீ கண்டது' என இருவகை உகரமும் ஒற்
டுத்து உரியசையாயினவாறு காண்க. உம்மை எதிர்மறையாதலின் ஒற்
டாது வருதலே பெரும்பான்மை யென்றுணர்க. நிலைமொழி ஒற்று
க்கு உண்ணும், நடக்கும் என்பன தேமா புளிமாவாயே நிற்கும்; விக்
நன், கடவுள் என்பனவும் அவை. (௧௦)

௧௧. அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே.

இது முற்கூறியவற்றிற்கும் இனி வருஞ் சீர்க்குமெல்லாம் புறனடை.

இ-ள். அசை..........சேர்த்தி எ-து அசைகளையும் சீர்களையும் ஓசை
யொடு சேர்த்தி. வகுத்.................ராறே எ-து வேறுபாடுணர்வித்த
லும் செய்யுளிலக்கணத்துறைபோயினாரதுநெறி. எ-று.

முற்கூறிய மாத்திரையென்னு முறுப்பின் ஓசையை யளந்து இன்
னோசையும், இன்னாவோசையும் அறிந்து உணர்த்துக. எ-று.

உ-ம். 'தருக்கிப் புணர்ந்து தணந்த தமது, பொருப்புப் புடைத்துப்
புடைத்து' என்றால் வெண்பாவீற்றடி இன்னோசைத்தாகாமையிற் 'பொ
ருப்புத் ததைந்த பொழிந்து' என மெல்லினவோசைசேர்க்க இன்னோசைத்
தாயிற்று. 'நிலமிசை நீடுவாழ் வார்' (திருக்குறள்-௩) இதனுள் வாழ்வா
ரென்னும் ஓசையைவகுத்து வார் என நேரசைச்சீராக்க அசையான் இன்
னோசைத்தாயிற்று. இதனை வகையுளி என வேறொருறுப்பாக்குவாருமுளர்.
இனிக்கட்டளையடியையும் சீர்வகையடியையும் இசையொடுசேர்த்தி இன்
னோசை யுணர்க. அஃது 'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' (செய்-௬௮)
என்ற பதினான்கெழுத்தளவும்வருங் கட்டளைவெண்பாவும் வெண் சீரோ
டொன்றிற் கலித்தளைதட்டு இன்னோசை பெறாதாம். மாசேர்வாய் மாசேர்

வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என்றூற் றுள்ளலோசையும்பிறக்கும். இ மாசேர்வாய் பாதிரி காருருமுக் காருருமு எனின் இன்னோசைத்தாய்ச் பலோசைபிறந்தது. இனிச்சீர்வகையடிக்கும் 'யாதானு நாடாமா மால்* யாதோதான்' என்றூற் சீர்வகைத்துள்ளலோசையும், 'என் வன்'* என்றூற் சீர்வகைச் செப்பலோசையும் பிறக்குமாறு இசையொடு த்தியுணர்க. இனி ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசேர்வாய் என் ஞாயிறு என்ற இயற்சீர்ப்பின் நிரையொன்றி ஆசிரியத்தளையாயிற்றே கலித்தளைப்பாற்படுதலும்: ஞாயிறு புலிசேர்வாய் புலிசேர்வாய் மாசேர் என்றவழிப் புலிசேர்வாய் மாசேர்வாயென நேரொன்றிற்றேனும் கலித் ப்பாற்படுதலும் இசையொடு சேர்த்தியுணர்க. இவ்வாறே பிறவும் வ துணர்த்துதல் அத்துறைபோயினார்க்கே தெரிவதாம்.

இனி உம்மையான் அடியு மிவ்வாறே வகுத்துணர்த்துக. 'நுதல இ யா நாட்ட மிகலட்டுக், கையது கணிச்சியொடு மழுவே' (அகம் - கட வாழ்த்து) என்புழி இகலட்டு என்னுஞ்சீர் குறித்தபொருளை முடியநாப் யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது 'இகலட்டுக்கையது' எனமேவி யோடு பொருள்கூடிற்றேனும் இசையொடு சேர்த்தி வகுத்ததாயி இன்னும் அதனானே எழுத்தல்லெவியாகிய 'சுஃஃறென்னுந்தண்டோட் பெண்ணை' என்பதனை அசையொடுஞ் சீரொடுஞ் சேர்த்துணர்த்தலுங் ள்க. இனி அகவன் முதலிய நான்கோசையினையும் ஒன்று மூன்றாக்கி த்தல் தொல்காப்பியனார் கருத்தன்றாயிற்று; என்னை? இயலசை மயங் இயற்சீரும், உரியசை மயங்கிய இயற்சீரும், வெண்சீரும்பற்றி யோ வேறுபடத்தோன்றலின் அவை பன்னிரண்டென்னும் வரையுளடங்க ன்பது பற்றி. இன்னும் 'இசையொடு சேர்த்தி' என்றதனானே 'ஐஎன மிடனுமாருண்டே' (தொல்-மொழிமரபு-உ௪) என்ற ஐகாரமும் பொ சிதைந்திசையொடுசேர்தல் கொள்க. 'வண்கொன்றையை மருட்டுங் க '† புகழ்த லானாப்பெருவண் மையனே' இவைமுதலிடைகடைகளிற் சி தும் வருமென்று கொள்க.

௧௨. ஈரசை கொண்டு மூவகை ‡புணர்த்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே.

---

* திருக்குறள்—௩௬௭.

† "செங்கண்மேதி கரும்புழக்கி, யங்கணீலத் தலருந்திப், பெ காஞ்சி நிழற்றுயிலுஞ், செழுநீர் நல்வய லூரன், புகழ்த லானாப் பெரு மையனே" இது யாப்பருங்கலவிருத்திமேற்கோள் (௧௫).

‡ உரையாசிரியரும் இதுவே பாடங்கொண்டார். பேராசிரியர் 'பு தும்' என ஓதுவர்.

இது நிறுத்தமுறையானே சீருணர்த்துவான் றொடங்கி அவற்றின் [பெய]ரும் அவற்றது பொதுவிலக்கணமும் உணர்த்திற்று.

இ-ள். ஈரசை யியைந்துகொண்டும் எ-து ஈரசை தன்னில் இயைந்து ருள்கொண்டும். மூவசை யியைந்துகொண்டும் எ-து மூவசை தன்னி யைந்து பொருள்கொண்டும். இற்றது சீரெனப்படும் எ-து அற்றுநிற்பது ரன்று சிறப்பித்துச்சொல்லப்படும். சீர்புணர்த்தும் சீரெனப்படும் எ-து வாறன்றி அச்சீர்தான் ஒருசீரோடொருசீர் தொடரப் பிறர்கூட்டப்பட்டு ற்றலுஞ் சீரென்று சொல்லப்படுமென்றுங் கொள்க. எ-று.

'இயைந்து' என்றதனையும் 'கொண்டு' என்றதனையும் ஈரசைக்கும் வசைக்குங் கூட்டிக் 'கொண்டு' என்பதற்குப் பொருள்கொண்டு என்று பாருளுரைக்க. நடுவுநின்ற 'சீர்' என்றதனைப் 'புணர்த்தும்' என்றதனோடு டிக்கூட்டுக. இயைந்து என்றதனான் ஒருசீர்க்கட் பலசொற்றொடர்ந்து னும் அவையொன்றுபட்டுநிற்றல் வேண்டுமென்றுணர்க.* எனவே, சொ ல்லாம் ஈரசையும் மூவசையுமாயல்லது வாராவென்பதூஉம், இனிப் ணர்த்து என்றதனான் அச்சீர்கள் அவ்வாறற்றுநிற்குமேனும் பிறர் தொட பு படுத்தும்வழிப் புணர்ச்சிவிகாரமெய்தாமற் றம்முட்டொடர்ந்துநிற்றலும் ணர்ச்சிவிகாரமெய்தியுந்தொடர்ந்துநிற்றலுமுடைய என்பதூஉங் கொள்க. —ம் 'போந்து சென்று சார்ந்து சார்ந்து, மதனுடை நெஞ்சமொடு நகோ னென்றது' இவை புணர்ச்சிவிகாரமெய்தாமல் இசையற்றுத்தொடர்ந்தன. கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' இது வல்லெழுத்துப்புணர்ச்சியெய் ற்று. இன்னும் அதனானே ஒருசொல்லைப் பகுத்துச் சீர்க்குவேண்டுமா ருள் வேறுசீராக்கியவழியும் அச்சீர்வகையான் வேறுசொல்லிலக்கணம் ருபெறுதும். அது 'மம்மர் நெஞ்சினேன் றொழுதுநின் றதுவே' என்புழிநின் து என்னுங் குற்றுகரவீற்றுச்சொல்லினைப்பிரித்து அதுவேஎன வேறொரு ராக்க முற்றுகரமாகி வேறுபடுதல் கொள்க. எனப்படும் என்று சிறப்பித் லதனான் இவை சிறப்புடையஎன்பதூஉம், ஓரசைச்சீர் இவைபோலச் சிற பில என்பதூஉம் உணர்த்திற்று. உண்ணுநின்றான் என நாலசையானும் வருமாலெனின், அவை பிளவுபட்டு நிற்றலின் ஒரு சீரெனப்படாமையா —னும், அவை சீராகவருஞ்செய்யுளின்மையானும், வஞ்சியுள் 'நேரிழை மகளி நணங்குணக் கவரும்' (பட்டினப்பாலை) என்ற ஆசிரியவடியினை நாலசைச் ர் காட்டவேண்டுவோர் இருசீரடியாகவுரைப்பினும் அவற்றிற்குத் தூக்க

---

* 'மற்றுச் சீரென்றதென்னையெனின், பாணிபோன்று இயைபடநிற்ற ன் அது சீரெனத் தொழிற்பெயராம்; என்னை? சொற்சீர்த்திறுதல் என் த் தொழிற்படுத்தோதினமையின்' என்றார் பேராசிரியர்.

லோசையின்றாகலானும், சீர்தம்முட்புணர்ந்திறுதலின்மையானும், ...
சீர் அறுபது காட்டுகின்றவழி யாண்டும் நேர்பசை நிரைபசைகள் அ...
ருமையானும் தொல்காப்பியனார் கொள்ளார். உ-ம் 'சாத்தன், கொற்ற...
மா ஈரசைச்சீர்கொண்டன. கானப்பேர், சாய்க்கானம், தேமாங்காய் எ...
உண்ணுதன, தின்னுதன, தேமாங்கனி எனவும் இவை மூவசைகொண்...
பிறர் தொடர்புபடுத்தின செய்யுள் 'உலகமுவப்ப வலனேர்பு' (திருமு...
ற்றுப்படை) 'யாதானு நாடாமால்' எனவும் 'வசையில் புகழ்வயங்கு ...
மீன்' (பட்டினப்பாலை) எனவும் ஈரசைச்சீரும் மூவசைச்சீரும் வந்தன. (

கரு. இயலசை மயக்க மியற்சீ ரேனை
யுரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்.

இது முறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்...
மயங்கிவரும் ஈரசைச்சீர் உணர்த்திற்று.

இ-ள். இயலசை மயங்கினவற்றை இயற்சீரென்றும் உரியசை...
கினவற்றை ஆசிரியவுரிச்சீரென்றும் கூறுக. எ-று.

மயக்கம் என்றது தம்மொடுதாமயங்குதலும் தம்மொடுபிறிதும...
தனுமாம். உ-ம். நேர்நேர், நிரைநிரை எனத் தம்மொடுதாமயங்கின ; ...
டினையும் பிறித்து நேர்நிரை நிரைநேர் எனப் பிறிதொடுமயக்க இந்நா...
இயற்சீராயிற்று. இந்நான்கு வழியுமல்லது வேறுகூட்டமின்மையும்
ர்க. இவற்றைத் தேமா, புளிமா, பாதிரி, கணவிரிஎனவும், கருவிளம்...
ளம் எனவும் காட்டுப; பிறவாறுங்காட்டுப. நேர்புநேர்பு நிரைபுநிரைபு
தம்மொடுதாமயங்கின. இரண்டினையும் பிறித்து நேர்பு நிரைபு,
நேர்பு எனப் பிறிதொடுமயக்க இந்நான்கும் ஆசிரிய வுரிச்சீராயிற்று.
றை வீடுபேறு, தடவுமருது, பாறுகுருகு, வரகுசோறு எனக்காட்டுப.
யுள்—'அவரோ, கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை' (குறுந்தொகை...
என நான்கியற்சீரும் வந்தன. 'வெளிற்றுப் பனந்துணியின் வீற்று...
கிடப்ப' எனவும் 'நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்து' (அக...
எனவும் 'பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்' எனவும் 'வ...
நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்' (திருமுருகாற்றுப்படை) ...
வந்தவற்றுள் வீற்றுவீற்றுஎனவும் இறவுக்கலித்துஎனவும் பூண்டு...
எனவும் வசிந்துவாங்குஎனவும் நான்காசிரியவுரிச்சீரும் வந்தன.
பாவிற்கும்இயற்றலானும், இயல்புவகையான் ஒரோசொல்லாய்வரு...
ரும்பான்மையாகலானும் இயற்சீரெனவும், ஆசிரியத்திற்கு உரி...
உரிச்சீரெனவும் ஆட்சியுங்குணமுங்காரணமாகப் பெற்றபெயர்.

(செய்-கக) எனவும் 'வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீர்'(செ
ும் பிறுண்டும் ஆள்ப. (கரு)

முன்னிரை வரினு மன்ன வாகும்.

இ இயலசையும் உரியசையும் மயங்கிச் சீராமாறு கூறுகின்றது.

'உரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்' (செய்-கங) என்ற அதிகா
அவ்வுரியசைமுன்னர் நிரையசைவரினும் அவ்வுரியசை மயக்கமா
யவுரிச்சீராம். எ-று.

அவ நேர்புநிரை, நிரைபுநிரை. உ-ம். நடுகொடி நாணுத்தளை, உ. று
கொடிஎனவரும். செய்யுள்—'ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண்
' (புறம்-இ) 'நாணுத்தளை யாக வைகிமாண் விளக்கு' 'களிற்றுக்
பாருத கண்ணகன் பறந்தலை' (புறம்-கச) 'உவவுமதி யுருவி னோங்
ன்குடை' (ஷை-க) 'ஓங்குதிரை வியன்பரப்பின்' (மதுரைக்காஞ்சி)
தமிழ்ப் பாவலர்க்கு' 'களிற்றுநிணத் துகிலுடுத்த' 'பிணர்மோட்டுப்
ரிர்' 'நிலவுமணல் வியன்கானல்' எனவும் ஆசிரியத்திலும் வஞ்சியி
தன. 'தூங்குசிறை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டு' எனவும்
டி யாக வெழுதுகோ' எனவும் வெண்பாவினுட் கட்டளையடியல்வழி
ன்மைவந்தன. கட்டளையடியன்மை இசையொடுசேர்த்தியுணர்க.
இயலசையோடு மயங்கினமையிற் பாதிரி கணவிரிபோலக் கொ
(கச)

கரு. நேரவ ணிற்பி னியற்சீர்ப் பால.

இஃது இயலசை உரியசை மயக்கத்துப் பிறப்பன இரண்டியற்சீருண
று.

இ-ள். அவண் நேர்நிற்பின் இயற்சீர்ப்பால எ-து மேனின்ற அதிகா
ன் உரியசையிரண்டன்பின்னும் நேரசைவரின் அவையிரண்டும் இய
பாலவாம்.* எ-று.

அவை நேர்புநேர், நிரைபுநேர்; உ-ம். சேற்றுக்கால், வேணுக்கோல்
ற்றுத்தாள், முழவுத்தோள் எனவரும்; நீத்துநீர், குளத்துநீர் எனவும்
துபூ, யேவுசிர், விறகுதீ, உருமுதீ எனவும் கண்டுகொள்க. இவையெ
பாதிரி கணவிரி என்னும் இயற்சீர்ப்பாற்படும். போதுபூ, விறகு

---

* "இவற்றை ஆசிரியவுரிச்சீர்ப்பின்வைத்தது என்னையெனின்;—இவையு
அவபோல ஈண்டொருங்கியைதல் பெரும்பான்மையென்பதறிவித்த
னவுணர்க" என்றார் பேராசிரியர்.

என்னுமிரண்டன்கட் குற்றுகரம் மேல்வரும் நெடிலோடிணைந்து நிரை பாதிரி கணவிரிபோல நிரையாமோவெனின்; ஆகா;— அக்குற்றுகரம் நிரைபுமாயேநின்று நேருநிரையு முதலாய் நிரையீருகிய சீர்தளை டாங்குத் தட்கும்; செய்யுள்—' நீத்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மா எனப் போதுபூவும், விறகுதீயும் வந்தன்.

**கசு.** இயலசை யீற்றுமு னுரியசை வரினே
நிரையசை யியல வாகு மென்ப.

இது மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் உரியசை லசைமயக்கத்துள் ஒழிந்துநின்ற நான்கியற்சீரும் உணர்த்திற்று.

இ-ள். இயலசை........வரினே எ-து இயலசையிரண்டன்பின் உரியசையிரண்டும் ஒன்றிரண்டுசெய்து மயங்கி நான்காங்கால் அவ் டுரியசையும்; நிரை...... மென்ப எ-து இயலசைமயக்கமாகிய இயற்சீர னுள் நிரையீற்ற பாதிரியும் கணவிரியும்போல வருஞ் சீரொடு தட்கும்.

அவை நேர்நேர்பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரைநிரைபு என கால் நேர்முதலிரண்டும் பாதிரிபோலவும் நிரைமுதலிரண்டும் கணவி லவும் கொள்க.

*இச்சூத்திரமும் தளைக்குமாறு கூறிற்றும். உ-ம். போரே ஞணு, பூமருது காருருமு, கடியாறு பெருநாணு, மழகளிறு நரை எனவரும்.

**கஎ.** அளபெடை யசைநிலை யாகலு முரித்தே.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

இ-ள். எழுத்ததிகாரத்து'நெட்டெழுத்தேழேயோரெழுத்தொரு (மொழி-கo) என்றதனற் சொல்லாந்தன்மையெய்திய அளபெடை ஈரசைச்சீர்கூறிய அதிகாரத்தானும் இயற்சீராந் தன்மையெய்திற்று னையே எழுத்துநிலைமைப்படுத்து அசைநிலையும்வேண்டலின். அள ........முரித்தே எ-து அளபெடை மேற்கூறிய இயற்சீர்நிலைமை தலையன்றி ஓரசையாய் நிற்றலுமுரித்து. எ-று.

---

* "இச்சூத்திரமும் சீராமாறேயன்றிச் சீர்தளைக்குமாறுங் கூறிய ற்று. இவற்றைப் போரேறு பூமருது கடியாறு மழகளிறு எனினும் காது" என்றார் பேராசிரியரும்.

உம்மையாற் சீர்நிலையாதலேவலியுடைத்து. நிலையென்றதனால் எழு நிலையும் கோர்ந்தார். அங்ஙனம் சீர்நிலை பெறுங்கால் முற்கூறிய ஈரசைச் திறனுள் ஆசிரியவுரிச்சீராறும், போதுபூ விறகுதீ என்னுமிரண்டியற் ஒழித்து ஒழிந்த நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை, நேர் பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரைநிரைபு என்னுமியற்சீர் எட்டுமாம். னமாதல் ஒருமொழியகத்தேயுடைய என்பது. ஆஅ எனத்தேமா ற்று. கடாஅ எனப் புளிமாவாயிற்று. யாஅது என ஈரெழுத்து ஞா ஆயிற்று; என்னை? கடாஅ என்புழி அளபெடையதாகாரம் பிரித்துக் நெடிலாயினாற்போல ஆகாரத்துப் பின்னின்ற அகரமுங் குற்றுகரமுங் லிணையெனப் பட்டமையினென்பது. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொ ம். ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரி. வடாஅது என்பது மூவெ துக்கணவிரியாம். படாகையென நாலெழுத்துக்கணவிரியாம். ஆஅங் ன ஈரெழுத்துப் போரேறும். ஆஅவது என மூவெழுத்துப் பூமருது அர்த்து என்பது கடியாறும். பாஅயது என்பது மழகளிறும். இவை சொல்லாகிநின்று எட்டியற்சீரானும் அளபெடுத்தன. 'தேஎந் தேரும் ம் புறவிற், போஒரி துள்ளுஞ் சோஒரி நண்ணிக், குராஅம் பிணையல் ாஅங் குஞ்சிக், குடாஅரிக் கோவல ரடாஅரின் வைத்த, காஎனறிச் செ னர் கொல்லோ, மேஎனறிச் சென்று பொருள்படைப் போரே'—இத ர் இயலசை மயங்கிய இயற்சீர் நான்கும் வந்தன. ஒழிந்த நான்கும் இவ ள் அடங்கும். இங்ஙனம் சீர்நிலையெய்திய வழக்கிற்கும் செய்யுட்கும் ாதுவாயது இயற்கையளபெடை என்றும், செய்யுட்குப்புலவர் ஓசைகரு செய்துகொண்டது செயற்கையளபெடை என்றுங்கொள்க; இவ்வி தி டளையடிக்கென்றுணர்க. இவை சீர்நிலையடிக்காயிற் றனிநிலை, முதனிலை டைநிலை, இறுதிநிலை எனக்கொள்வர். 'ஆஅ வளிய வலவன் *' எனவும், ர் சிதைய வழாஅ லெல்லாநின், சேஎயரி சிந்திய கண்' எனவுமிவை நேர் ரும் நிரைநேருமாக அலகிடுப. இனி ஓரசையாங்காற் செயற்கையளபெ சீர்நிலையாதல் செய்யுட்கேயுரியவாதல்போல, இயற்கையளபெடை அசை ாதல் செய்யுட்கேயுரியவாதலும், புணர்ச்சிவகையான் எழுத்துப்பேறு ளபெடைகள் அசைநிலையாதலும், பொருள் புலப்பாட்டிற்குப் புலவர் செயற்கையளபெடையுட்சிலவும் அசைநிலையாதலுங்கொள்க. உ-ம்.

---

* "ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினொடு, டிஇ நிரைகொண் டாளைப் இரியுட், டேஎந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றேஎண், மேஎ வலைப்ப நம்போ னறுந்தா, லோஒ வுழக்குந் துயர்".

'உப்போஒ வெனவுரைத்து மீள்வாள் *' என்புழிப்பண்டமாற்றிெ
வாசாரத்திற்குள்ள ஓரலகே பெறுதலின் ஓரசையாயிற்று. "
று "† என்பதும் அது. இவை இயற்கையளபெடை யசைநிலை
பலாஅக்கோட்டுத் தீங்கனிமேற் பாய்ந்த கடுவன்' என்புழிப் 'பலாஅ
ளிமாவாகாது ஓரசையாய்க் கோடு என்பதுங் கூட்டிக் கணவிரியாக
பெறும். 'குறியதன் முன்னரும்' (எழுத்-உயிர்மயங்-உச) என்னுஞ்
ரத்தாற் பெற்ற அகரமும் அளபெடைபோல் அசைநிலையாயிற்று.
பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நீணிலா மென்றோள், கலம்போஒய்ப்
கௌவை செய' எனப் போஒய்ப்போஒய் எனச் செய்கைக்குறிப்புப்
டச் செய்யுள்செய்தவழியும் அசைநிலையாயிற்று. இவை ஓசை சிதை
செய்யுளின்பஞ் சிதையுமென்று அலகிருக்கைக்கட் சிதைத்தார். இ
குபெறுமெனவே, நெடிலின் றன்மையேயாயிற்று. இதனனே கு
போல் எழுத்தாந்தன்மையும்பெற்றும். இனி, வாஅழ்க எனவும், 
எனவும் மூவகைச்சீரானும் வருதல் உம்மையாற் சீர்நிலை யெய்து
ற் பெறுதும். அவை வெண்சீரும் வஞ்சிச்சீருமாம்.

கஅ. ஒற்றள பெடுப்பினு மற்றென மொழிப.

இஃது ஒற்றளபெடையும் சீர்நிலையாதலேயன்றி அசைநிலையு
எய்தாததெய்துவித்தது.

இ-ள். ஒற்........மொழிப எ-து ஒற்றளபெடுத்தாலும் உ
டபோலச் சீர்நிலையெய்தலும் ஓரசையாய் நிற்றலுமுரித்து. எ.று

மற்றெனவே, 'ங ஞ ண ந ம ன வ ய ல ள வாய்தம்' என
ரொற்றுங் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் அளபெடுத்தல் பெறுதும்.
கலம் எனவும், அரங்ங்கம் எனவும் வரும். ஏனையவற்றோடும்
சீராமெனவே, ஈரசைச்சீரும் மூவகைச்சீருமாதல் பெறுதும். மே
வகைச்சீர் கூறுதலின் இதனை ஈண்டுவைத்தார். ஓரசையாதல் சிறப

* "இடைநுடங்க வீர்ங்கோதை பின்றாழ வாட்கண், புடை
போழ்வாய் திறந்து—கடைக்கடையி, னுப்போஒ வெனவுரைத்து
ளாளிமுறுவற், கொப்போநீர் வேலி யுலகு".

† "பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள், சொல்
தோற்றிலனந் தூற்றினவா—னெல்லுக்கு, நூறோஒநூ றென்பா
ண்டைக்கு மென்முலைக்கு, மாறோமா லென்றளந்த மண்" 'தோற்
எனவும் பாடம். இவை யாப்பருங்கலவிருத்திமேற்கோள்.

ண்ணா தண்ண்ணெனக் கண்டிமகட்டும் என்புழிக் கண்ண்ணென்பது யெய்திச் சேமாவாயிற்று. தண்ண்ணென என்றவழித் தட்பத்திற் க்கூறுதற்காக இயற்சீர்க்கண் ணகரவொற்றினை மிகக்கொடுத்து அள ந்தச செய்யுள்செய்தான். அது, மாசெல்சுரம் என்னும் வஞ்சிச்சீரா ஆகற்க: பாதிரி என முன்னின்ற இயற்சீரேயாக என வழுவமைத்த இதுவும் ஓரசை சிதையாது நிற்கவும் அலகுபெறுதெனவே எழுத் ன்மை எய்திற்று. இது வழக்கிற்குஞ் செய்யுட்கும் உறப்பாய் நின் அளபெழுதலும், தோற்றிக்கொண்டன அளபெழுதலுமாம். சுள்ள் றது, புள்ள்ளென்றது, நள்ள்ளென்றது, கிண்ண்ணென்றது—இவை ிற்குஞ் செய்யுட்குமுரிய. தோற்றினது—கண்ண்ணென முற்காட்டு இருவகை யுகரமீறுய்க் கொங்ங்கு, குரங்ங்கு, மின்ன்னு, எஃஃஃ( ன உயிரளபெடையின் வருமெழுத்தோடுகூடிப் பேரேறு, கடியாவ ற்குமாறுபோலாது வண்டு வரகு என்னும் உரியசைப்பாற்படுதலின் ளபெடையின் வேருக வோதினர். இருவகையுகரத்தோ டியையாத க் ‘கண்ண்டண்ண்ணென’ ‘கஃஃறென்னுங் கல்லதரத்தம்’ எனத் தே ாக அலகுபெற்றன. இனி, ‘நீட்டம் வேண்டின்’ (எழுத்-நான்-கு) என் ந் சூத்திரத்துட்காட்டிய ‘செய்யுட்க ளோசை’ * என்னும் யாபுராணச் திரத்துள் ‘மைதீர்வொற்று’ என்றதனானே, சீர்வகை யடியோசைகெடின் றில்லாத சொல்லிற்கோசை அவ்வொற்றை உண்டாக்கிநிற்குமென் ம், ‘குன்றுமேவொற்றளபுங்கொள்’ என்றதனானே அவ்வொற்றுனும் ச நிறையாவிடின் அங்ஙனம் வருவித்த ஒற்றை அளபெடுத்துங்கொள்க ன்றுங் கூறியவிதியுங்கொள்க. “அம்பொனைங்........ரென்”† இதனுள் வகரவொற்றில்வழி ஓசை அவ்வொற்றையுண்டாக்கிற்று. அஃது அள டுத்தது வந்துழிக்காண்க. (கஅ)

ககூ. இயற்சீ ரிறுதிமு னேரவ ணிற்பி
னுரிச்சீர் வெண்பா வாகு மென்ப.

---

* “செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு, மையப்பா டின்றி யுணை—மைதீர்வொற், றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு, குன் றவொற்றளபுங் கொள்”

† “அம்பொ னைந்து டையா காம ஊர்ப னைக்ன வந்தனை, னம்பு ல்லர் நன்கு நங்கு நீர ராயினுந், தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பி னெஞ்சு ந்து தாழ்வர் தாம், பொங்க ரவ்வ வல்கு லாரெ னப்பு கன்று சொல்லி ன்.” (சிந்தாமணி-காமசு-௬). ‘தங்கு ரவ்வர்’ ‘பொங்க ரவ்வ’ என ந்துகுத்தே இச்சங்கத்துள்ள பழைய சிந்தாமணிப் பிரதியொன்றிற் ணப்பட்டது.

இது முறையானே மூவசைச்சீருணர்த்துதலெருடங்கி, வெண்பாவுரிச்சீர் உணர்த்துகின்றார்.

இ-ள். அவண் இயற்சீரிறுதிமுன் நேர்நிற்பின் எ-து அவ்வ கூறிய இயலசையாணுகிய இயற்சீரிறுதிக்கண் நேரசைவந்துநிற்பின் பா வுரிச்சீராகுமென்ப எ-து அந்நான்கும் வெண்பாவுரிச்சீராமென் வர் புலவர். எ-று.

அவை.—நேர்நேர்நேர், நிரைநிரைநேர், நேர்நிரைநேர், நிரை எனவரும். இவற்றை மாசெல்வாய், புலிவருவாய், மாவருவாய், வாய் எனவும்: தேமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய், புளி எனவுங்காட்டுக. செய்யுள்.—"காமன்கா ணென்று கருவூரார் பா தாமந்தாழ் கோதை வருவானை—யாமு, மிருகுடங்கை யானெதிரே தொழக்கண், டொருகுடங்கை யாயின கண்" என நான்கு வெண் காண்க. இஃது ஆட்சியுங் குணமுங் காரணமாகப் பெற்றபெயர், வி விற்கும் அதன் பகுதியாகிய கலிப்பாவிற்கு முரிமையின். இனிப் வாக இயற்சீரென்றால் இயலிசைமயக்கமாகிய இயற்சீர் நான்கினையுப துவாக உரிச்சீரென்றால் உரியசைமயக்கமாகிய உரிச்சீர் நான்கி கோடல்வேண்டினர் இத்தொல்காப்பியனுரென்பது, இக்சூத்திரத் 'வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ, ரின்பா நேரடிக்' கென்பத (செய்-உ௩) பெறுதும்; இதனை ஆட்சியும் பெற்றும். இதுவுங் க யடிக்குஞ் சிர்வகையடிக்குமுரித்து.

௨0. வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவசை யான.

இஃது ஒழிந்த மூவசைச்சீர் கூறுகின்றது.

இ-ள். வஞ்சிச்சீரென்று கூறுபடுக்கப்பட்டன, மேற்கூறிய வெ ரல்லா மூவசைச்சீரெல்லாம். எ-று.

அவை வருமாறு;—நேர், நிரை, நேர்பு, நிரைபு என நான்கனையு த்தி, ஒருகால் நேர்முன்னுகவும், ஒருகால் நிரைமுன்னுகவும், ஒருகா

'*இதனுட் காமன்காண் எனவும், கருவூரார் எனவும், இருகுட எனவும், யானெதிரே எனவும் நான்குவெண்சீரும் வந்தன' என்றார் சிரியர்.

றாகவும், ஒருகால் நிரைபுருடனாகவும் எடுத்து நேரீறாக முடிக்கப் பதினாறாம்; அவ்வாறெடுத்து நிரையீறாக முடிக்கப் பதினாறாம்; அவ்வாறெடுத்து நேர்பீறாக முடிக்கப் பதினாறாம்; அவ்வாறெடுத்து நிரைபீறாக முடிக்கப் பதினாறாம்: ஆகவே, அறுபத்துநான்காயிற்று. அவ்வாறெடுத்து நான்கு மைக்கு நடுவு நேரும் நிரையும் நேர்பும் நிரைபுமாக நிற்குமாறும் உண

| அவை;— | | உதாரணம். |
|---|---|---|
| ௧ | நேர்நேர்நேர் | மாசேர்வாய் |
| ௨ | நேர்நிரைநேர் | மாவருவாய் |
| ௩ | நேர்நேர்புநேர் | மாபோகுவாய் |
| ௪ | நேர்நிரைபுநேர் | மாவழங்குவாய் |
| ௫ | நிரைநேர்நேர் | புலிசேர்வாய் |
| ௬ | நிரைநிரைநேர் | புலிவருவாய் |
| ௭ | நிரைநேர்புநேர் | புலிபோகுவாய் |
| ௮ | நிரைநிரைபுநேர் | புலிவழங்குவாய் |
| ௯ | நேர்புநேர்நேர் | பாம்புசேர்வாய் |
| ௧௦ | நேர்புநிரைநேர் | பாம்புவருவாய் |
| ௧௧ | நேர்புநேர்புநேர் | பாம்புபோகுவாய் |
| ௧௨ | நேர்புநிரைபுநேர் | பாம்புவழங்குவாய் |
| ௧௩ | நிரைபுநேர்நேர் | களிறுசே[illegible]வாய் |
| ௧௪ | நிரைபுநிரைநேர் | களிறுவருவாய் |
| ௧௫ | நிரைபுநேர்புநேர் | களிறுபோகுவாய் |
| ௧௬ | நிரைபுநிரைபுநேர் | களிறுவழங்குவாய் |

எனவும் நேரீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன. வெண்சீரென மேற்காட்டிய நான்கு மொழித்தொழிந்த பன்னிரண்டும் வஞ்சியுரிச்சீர்.

| | | |
|---|---|---|
| ௧௭ | நேர்நேர்நிரை | மாசேர்சுரம் |
| ௧௮ | நேர்நிரைநிரை | மாவருசுரம் |
| ௧௯ | நேர்நேர்புநிரை | மாபோகுசுரம் |
| ௨௦ | நேர்நிரைபுநிரை | மாவழங்குசுரம் |
| ௨௧ | நிரைநேர்நிரை | புலிசேர்சுரம் |
| ௨௨ | நிரைநிரைநிரை | புலிவருசுரம் |
| ௨௩ | நிரைநேர்புநிரை | புலிபோகுசுரம் |
| ௨௪ | நிரைநிரைபுநிரை | புலிவழங்குசுரம் |

| | | |
|---|---|---|
| ௨௫ | நேர்புநேர்நிரை | பாம்புசேர்சுரம் |
| ௨௬ | நேர்புநிரைநிரை | பாம்புவருசுரம் |
| ௨௭ | நேர்புநேர்புநிரை | பாம்புபோகுசுரம் |
| ௨௮ | நேர்புநிரைபுநிரை | பாம்புவழங்குசுரம் |
| ௨௯ | நிரைபுநேர்நிரை | களிறுசேர்சுரம் |
| ௩௦ | நிரைபுநிரைநிரை | களிறுவருசுரம் |
| ௩௧ | நிரைபுநேர்புநிரை | களிறுபோகுசுரம் |
| ௩௨ | நிரைபுநிரைபுநிரை | களிறுவழங்குசுரம் |

எனவும் நிரையீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன.

| | | |
|---|---|---|
| ௩௩ | நேர்நேர்நேர்பு | மாசேர்காடு |
| ௩௪ | நேர்நிரைநேர்பு | மாவருகாடு |
| ௩௫ | நேர்நேர்புநேர்பு | மாபோகுகாடு |
| ௩௬ | நேர்நிரைபுநேர்பு | மாவழங்குகாடு |
| ௩௭ | நிரைநேர்நேர்பு | புலிசேர்காடு |
| ௩௮ | நிரைநிரைநேர்பு | புலிவருகாடு |
| ௩௯ | நிரைநேர்புநேர்பு | புலிபோகுகாடு |
| ௪௦ | நிரைநிரைபுநேர்பு | புலிவழங்குகாடு |
| ௪௧ | நேர்புநேர்நேர்பு | பாம்புசேர்காடு |
| ௪௨ | நேர்புநிரைநேர்பு | பாம்புவருகாடு |
| ௪௩ | நேர்புநேர்புநேர்பு | பாம்புபோகுகாடு |
| ௪௪ | நேர்புநிரைபுநேர்பு | பாம்புவழங்குகாடு |
| ௪௫ | நிரைபுநேர்நேர்பு | களிறுசேர்காடு |
| ௪௬ | நிரைபுநிரைநேர்பு | களிறுவருகாடு |
| ௪௭ | நிரைபுநேர்புநேர்பு | களிறுபோகுகாடு |
| ௪௮ | நிரைபுநிரைபுநேர்பு | களிறுவழங்குகாடு |

எனவும் நேர்பீற்று மூவசைச்சீர் பதினாறும் வந்தன.

| | | |
|---|---|---|
| ௪௯ | நேர்நேர்நிரைபு | மாசேர்கடறு |
| ௫௦ | நேர்நிரைநிரைபு | மாவருகடறு |
| ௫௧ | நேர்நேர்புநிரைபு | மாபோகுகடறு |
| ௫௨ | நேர்நிரைபுநிரைபு | மாவழங்குகடறு |
| ௫௩ | நிரைநேர்நிரைபு | புலிசேர்கடறு |
| ௫௪ | நிரைநிரைநிரைபு | புலிவருகடறு |
| ௫௫ | நிரைநேர்புநிரைபு | புலிபோகுகடறு |
| ௫௬ | நிரைநிரைபுநிரைபு | புலிவழங்குகடறு |

பிறவியை நீத்தல் வேண்டி, முற்றிய பற்றொடு செற்ற நீக்கி, முனிமை யாக்கிய மூவா முத்தினைய, மயலற வளித்தநின் மலரடி, யரிய வன்று யுரிஇ னிற் பெறவே" இஃது எட்டடித்தரவுந் தரவின்பாகம்பற்றிய நான்கடித்தாழிசைமூன்றும், ஈரடியிரண்டும், ஓரடிநான்கும், இருசீரெட்டும், ஒருசீர்பதினாறுமாகிய நால்வகையெண்ணுந் தனிச்சொல்லும், எட்டடிச்சுரிதகமும்பெற்ற தலையளவு[1] வண்ணகப்பெருந்தேவபாணி. "பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்திப், புலியுரிமேற் பைந்தலைநாகப் பூங்கச்சை விரித் தமைத்துக், கண்கவருந் திருமேனி வெண்ணூலின் கவின்பகைப்பத், தண் கமழ்பூந் தாரிதழி தலைமலிந்து பிறைதயங்க, மொழிவலத்தான் மயங்காதே முறுவலாற் றேலாதே, விழிவலத்தா னுருவழித்தோன் வேடங்கண் டொர் வழியாக், கலிகெழு கடற்கச்சிக் கமழினர் தேமாவி, னொலிதளிரு முலைச் சுவடு முடன்சிறப்ப வுலவுங்கால்; நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிக்க, வேறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரா, லேறேறி யிடுபலிக்கு வரும்பொழுது மிடைபிரியாக், கூறேறும் பசும்பாகங் கொள்ளுமோ கொள்ளாதோ; பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு, வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால், வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீர்வருங்கா, றொல்லேற்றுச் சுறுகிடலுங் கொள்ளுமோ கொள்ளாதோ; நாணுக மடக்கையர்பாற் பலிக்கென்று நடந்தக்கால், பூணுகந் தழீஇக்கொளினும் பொங்காது போதுமால்; பூணுகந் தழீஇக்கொளினும் புனையுயிர்த்துப் பொங்காத, கோணாகம் யாந்தருபால் குடிக்குமோ குடியாதோ; எரிகவி னிமைக்கு மிடவயிற் றொருமிக்கைப், பரிகல னேந்தும் பரிசிறந் ததுகொல்; உமையவள் விலக்கவு மொல்கா னஞ்ச, மிமையவர் தம்மை யிரங்குண் டதுகொல்; இடையெழு பொழிற்கட்கு மிமைப்பளவிற் கொல்லேறே, கடைதோறு மதுரிற்பக் கற்பித்த வாறெவன்கொல்; இரப்புநீ வேட்டதுகேட் டிமையவரென் பட்டனரே, பாப்புநீர்க் கங்கையோ படர்சடையிற் கரந்ததே; பூண்டன வென்பு, புனைவது தும்பை, ஆண்டன பூதம், மறைவன வேதம், மிசைப்பன பல்பே, யெழீஇயது வீணை, யசைப்பன வேணி, யதிர்வன பொற்கழல்; எனவாங்கு; எல்லவிள மகளிரிடுபலி நசைஇப், பல்கடை திரிதருஞ் செல்வற் பரவுதும், கொடியணி யேணம் பொடியணிந் திடப்ப, வடதிசை வாகை சூடித் தென்றிசை, வென்றி வாய்த்த[2] வன்றாள் வளவ, னிமிழிசை வேங்கடம் போலத் தமிழகத்து, காவலொடு பெயரிய ஞாலங், காவல் போற்றி வாழிய நெடிதே" இஃது ஒருசீர்ச் சின்ன மொன்று மொழித் தல்லனவெல்லா முற்கூறியவுதாரணம்போல வந்தது. "ஆயிரங்

1 வண்ணகப்படும் பெருந்தேவபாணி என்பதும் பிரதிபேதம்.

2 வன்றாள்விடலை என்பதும் பிரதிபேதம்.

3 தமிழகத்து என்பதும் பிரதிபேதம்.

நால்வகை யுருவிற் பால்வே றாகிய, கால முதல்வநிற் பரவுது ஞாலத்து, நல்லவை நல்லவை யெல்லா நின்அது, செல்வ நோக்கி னெய்திய வல்லிற், றுயரொடு தொல்வினை நீங்கிப், பெயராச் சுற்றம் பெறுகம்யா மெனவே" இது ஆறடித்தரவும், மூன்றடித்தாழிசை மூன்றும், ஒருசீர்ச்சின்னம் பதினாறும், தனிச்சொல்லும், ஆறடிச்சுரிதகமும் பெற்றுவந்த இடையளவு வண்ணகத்தேவபாணி. 1"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக், கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளை, யழல்விழிச் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத், தாவொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க, வார்புனல் குருதி யகலிட முடனனைப்பக், கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்; முரசதிர் வியன்மதுரை முழுவதுந் தலைபனிப்பப், புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்ல, ரடியொடு முடியிறப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப், பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ; கலியொலி வியனுலகங் கலந்துட னளிகூர, வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோவு, மாணுதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கச், சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ; பன்மணி யினத்திரை பாய்ந்துட னிரிந்தோடக், கதழ்சோ ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு, வெரிநொடு மருப்புடைய வீழ்ந்துதிறம் வேறாக, வெருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ; இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல், வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்; விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி புகும்பொன்னும், பொருகளி றட்டோய் புரையு நின்னுடை; கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை, தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை, ஒலியிய லுவண மோங்கிய கொடியினை, வலியுயர் சகட மாற்றிய வடியினை; போரவுணர்க் கடந்தோய்நீ, புணர்மருதம் பிளந்தோய்நீ, நீர்கல மளந்தோய்நீ, நிழறிகழும் படையோய்நீ; ஊழிநீ, யுலகுநீ, யுருவுநீ, யருவுநீ, யாழிநீ, யருளுநீ, யறமுநீ, மறமுநீ; எனவாங்கு, அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன், றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற், கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப், புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன், றொன்று முதிர்கட லுலக முழுதுடன், 2ஒன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே." இது இருசீர் நான்கும் ஒருசீரெட்டும்பெற்று வந்தது. இதனுட் போரவுணர்க் கடந்தோ யென்பதனை முச்சீராக்கியும், ஊழிநீ யென்பதனை யிருசீராக்கியும் பின்னுள்ளோர் காட்டுதல் பொருந்தாமையுணர்க. (கசக)

1 "விளக்கத்தனார்பாடிய கெடலருமாமுனிவரொன்னுங்கலிப்பாப் புறநிலைவாழ்த்தாய்வந்ததுபிறவெனின் அஃதாசிரியச்சுரிதகத்தால்வந்தமையாற் குற்றமில்லை" என்பது யாப்பருங்கலவிருத்தி.

2 ஒன்றுதிகிரி எனவும், ஒன்றுபுதிகிரி எனவும் பாடம்.

லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ; கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ, னெல்லைநம் மானுள் வருமே லவன்வாயின், முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ'' (சிலப். பக்-௩௧௧.) இது படர்க்கைப்பாவலாய் மூன்றடுக்கியவழி மூன்றடியான்வந்தது. இது கந்திருவமார்க்கத்தா னிடைமடக்கி நான்கடியாமாறு முணர்க "யானைத்தோல் போர்த்துப் புலியினுரியுடுத்துக், கான வெருமைக் கருந்தலைமே னின்றாயால், வானோர் வணங்க மறைமேன் மறையாகி, ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றியே நிற்பாய்; வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக், கரியதிரி கோட்டுக் கலைமிசைமே னின்றாயா, லரியரன்பூ மேலோ னகமலர்மேன் மன்னும், விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்; சங்கமுஞ் சக்கரமுந் தாமரைக் கையேந்திச், செங்க ணரிமான் சினவிடைமே னின்றாயாற், கங்கை முடிக் கணிந்த கண்ணுதலோன் பாகத்து, மங்கை யுருவாய் மறைபோற்ற வேநிற்பாய்'' (சிலப். பக்-௨௮௨.) இவை முன்னிலைப்பரவலாய் மூன்றடுக்கி நான்கடியான் வந்தன. பதிகப்பாட்டிற்குச் சான்றோர்செய்த தேவாரங்கள் திருவாய்மொழி, திருப்பாட்டுத் திருவாசகம் [illegible] காண்க. அவை உலகவழக்கன்மையிற் காட்டாமாயினும். [illegible] ஒரு பொருண்மேன் மூன்றடுக்கிவருதலுந் தேவபாணியன்றி யாப்பினும் வேறுபட்டு வருவனவற்றின் கூறு. அங்ஙனம் மூன்றடுக்கி வாராது தொடர்ந்

---

புறத்திருந்த, வினைவரு பருவரல் போலத் துணைவரு, நெஞ்சமொடு வருத்தினன் பெரிதே'' எனவரும். அத்தாழிசை தாமேயும்வரும். தாழிசையின்றித் தாவுமுதலாயினவந்ததற்குச்செய்யுள் [1] "செவ்விய தீவிய சொல்லியவற்றொடு, பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம், பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைஇய, வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து, பகன்முனி வெஞ்சுர முன்ன லறிந்தேன், மகனல்லை மன்ற வினிது'' தரவு. "செல்வினைச் சென்றார் செய்யும் வினைமுற்றி, யன்பற மாறியா முள்ளத் துறந்தவன், பண்பு மறிதிரோ வென்று வருவாரை, யென்றிறம் யாதும் வினவல் வினவிற், பகலின் விளங்குநின் செம்மல் சிதையத், தவலருஞ் செய்வினை முற்றமை யாண்டோ, ரவலம் படுதலு முண்டு'' இது சுரிதகம். தாழிசையுந் தனிச்சொல்லுமில்லை. எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றியதற்குச் செய்யுள் [2] "மாமலர் முண்டகந் தில்லையொ டொருங்குடன், கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற், சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த, நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழை, பூமலர்ந் தவைபோலப் புள்ளல்கும் துறைவனே'' தரவு. "ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்,

---

1 பாலைக்கலி—௧௮.

2 நெய்தற்கலி—௧௧.

தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக், கூறுமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி, மாறுப்போர் மணிமிடற்ற வெண்கையாய் கேளினி; படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ, கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற், கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ; மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து, பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள், வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ; கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத், தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால், முலையணிந்த முறுவலாண் முற்பாணி தருவாளோ; எனவாங்கு, பாணியுந் தூக்குஞ் சீருமென்றிவை, மாணிழை யரிவை காப்ப, வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி” (கலி. கடவுள் வாழ்த்து). இது நான்குறுப்பான் வந்ததேனுந் தேவபாணியாய்வருதலின் முதனிலையொத்தாழிசை யாகாது. எனை யொன்றே யென்ற ஒத்தாழிசையேயாமாயினும் அவற்றிற்குரிய எண்ணுஞ் சின்னமும் இழத்தலிற் கொச்சகவொரு போகாயிற்று. அடக்கியலின்றி யடிநிமிர்ந் தொழுகியு மென்பது அடக்கியல் தனித்துவருதலின்றி யவ்வடக்கியலோடு ஒருசெய்யுளாய் அடிபரந்தொழுகியும் அடக்குமியல்பின் றென்றது முற்கூறிய வுறுப்புக்களைத் தனியேவந்து அடக்கிநிற்கும் இலக்கணமின்றியே வரும். உ-ம். எனவே "எழுசீ ரிறுதியா சிரியங் கலியே" (செய். எசு.) "வெண்பாவியலினும் பண்புற முடியும்" (செய். எஎ.) என்ற விதியாற் பெற்ற இறுதி ஒருதொடராய் இற்றுநிற்றலும், அடி நிமிரும் என்றதனான் முற்கூறியவற்றின் அடிவரையறையை மிகத்தலும், ஒழுகும் என்றதனான் எழுசீ ரிறுதியல்லாத எல்லாவடியுங் கலியோயா யொழுகிவருதலும் பெற்றாம். உ-ம். "மழைநுழைந்து புறப்பட்ட மதியமு ஞாயிறும்போ, லுழை வழங்கு வலம்புரியுந் திகிரியு மொளிசிறப்பப், பச் சென்ன வானிட்ட வில்லேபோற் பசுந்துழாய்க், கச்சென்னக் கனல்கின்ற கதிர்முலைமேற் கவின்செய்ய, வம்மேகத் திடைப்பிறந்த கரையுருமே றதிசயிப்ப, மைம்மேனி மருங்கதிர வரியேறு வாள்புடைப்ப, விண்டோயு மணிநீல வெற்பிடை வேய்மிடைந்தாங், கெண்டோளு மிடைநீழ லிளங்கிளிகள் களிகூரக், கொதியாது கொதித்தெறிந்த கோட்டெருமைத் தலையின் மிசை, மிதியாத சீறடி மிதித்தனை போற்றோன்றத், தாங்கிய புகர்வாளுங் கேடகமுந் தனித்தனி, வாங்கிய கோளரவு மதியமும் போன்றிலங்க, மைதொடுத்த கடற்புறஞ்சூழ் மலையென்ன மணியல்குல், கொய்துடுத்த பொற்றுகிலின் கொழுஞ்சோதிக் கொழுந்தோட்ட, நீனின்ற வடிவத்தா னெடியோனை முதற்பயந்த, தாயென்று முதுமறை பரவினும், யாயென் றல்ல தியாந்துணி யலமே" எனவரும். தேவபாணியான் வெண்பாவியலான் முடிக்கது வந்துழிக்காண்க. இக்கருத்தறியாதார் வெண்பாவிய

லாற் பண்புறமுடிந்த கலியடியுடையதனை வெண்கலிப்பாவென்பர். யாப்பி னும் பொருளினும் வேற்றுமையுடையதென்பது மேற்கூறியவாறும் இனி வருகின்றவாறுமின்றி யாப்பின்வேறுபடுதலும் பொருளின்வேறுபடுதலும். எ-று. அவை இருசீர்முதல் எண்சீர்காறும்வந்து முற்கூறியவாறன்றி அடிக் கண் நந்நான்காய்வரும். சில பிறவடிவிராயும்வருவனவும், பலவடிவந்தும், ஐங்கடிவந்தும் பாமயங்கிவருவனவும், இனி யீரடியான்வருவனவற்றுள் ஈற்றடி மிக்குங் குறைந்தும் குறையாதும்வந் தியலசைச்சீர்பெற்றுவருவன வும், ஓசையும் பொருளு மினிதாகாதுவருவனவும், அவ்விரண்டடிச்செய் யுண்முடிந்துநிற்கவும், ஈற்றடி யொன்றும் இரண்டும் மிக்குவருவனவும், பிற வாறாய்வருவனவும், இனி மூவடியான்வருவனவற்று ளீற்றடிகுறைந்தும் முதலடிமிக்கும் இடையடிகுறைந்தும் இறுதியடிமிக்கும் மூன்றடியிற் குறை யாதும் பிறவாறாயும் வருவனவும், இம்மூவடியிற்றபின் ஈற்றடியொன்றும் இரண்டும் மிக்குவருவனவும், பிறவாய்வருவனவும், இனி நான்கடியாய்வரு வனவற்றுண் முதலிடைகடையிற் குறைந்துவருவனவும், அம்முதலிடை டைக்கண்ணே யோரடியுமீரடியுஞ் சீர்மிக்குவருவனவும், பிறவாறாய் வருவனவும், அந்நான்கடியிற்றபின் ஈற்றடியொன்றும் இரண்டும் மிக்குவரு வனவும், இங்ஙனம் மிக்கு ஒருபொருண்மேன்மூன்றடுக்கி வருவனவும், அடுக்கிவருவனவும், அளவியலின் வேறுபடுவனவும், இனி யைந்தடியான் வருவனவற்றுள் ஈற்றடிகுறைந்துவருவனவும், அவ்வைந்தடியிற்றபின் ஓரடியும் ஈரடியும் மிக்குவருவனவும், முச்சீரான் இற்றுச் சிலசீர் மிக்குவரு வனவும், இனி ஆறுமுதலியவடிகளான்வருவனவும், இவ்விலக்கணமெல்லாம் பெற்றுவருதலுங் கடவுட்பொருட்டொடர்நிலைகள். பல தாவுந் தாழிசையு மாகி யிடையிடையச்செய்வனவும் அடக்கியலின்றி யடிமிகுந்து அடக்கியல் பெற்றுவருதலும் இன்னோரன்ன பலபகுதிகளுங் கொள்ளப்படும். பொருள் வேறுபடுமென்றலிற் புறப்பொருளான்வருவனவுங்கொள்க. இவற்றுட் சில திருவமார்க்கத்தான் இடைமடக்கிவருவனவுங்கொள்க. உ-ம். "நெய் யாடு தீயொக்கச், செய்யானைச் சேர்வார்க்குப், பொய்யாதவுள்ளமே, மெய் யாதல்வேண்டும்" இது குறளடி நான்கான்வந்தது. இது குட்டம்படாது மையணி கண்டனை வானோ, னையனை யயிரம் போழ்வாய்ப், பையர வம்பல னை, மெய்யனை மெய்து வீரே" இது சிந்தடி நான்கான்வந்தது. இவ்வா யியலசைச்சீரான்வருவது வந்துழிக்காண்க. "நீறணிந்த திருமேனி நெருப் புருவங் கிளைத்ததுபோற், கூறணிந்த குங்குமங்கொண் டொருமுலையோர் றிசெய்ய, வேறணிந்த சுடரொறிப்ப வேனிலாற் கெரிவிழித்த, வேறணிந்த வல்கொடியோ யெவ்வுயிர்க்கிற் றவிர்ந்தனவே" "வென்றான் வினையின் றொகையாய் விரிந்து தன்க, ணொன்றாய்ப்பரந்த வுணர்வின் னெறியா லுற்றுஞ், சென்றான் றிகழுஞ் சுடர்சூழொளிமூர்த்தியாகி நின்றானடிக்கீழ்ப்

ழுந்து ஈற்றடிகுறைந்து அசைச்சீரானிற்றது. "தாளாள னல்லாதார் தாம்ப ....ல நயக்கா ரென்றுமென்றும், யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும், பீலிபோற் சாய்ந்து விடும்பிளிற்றி யாங்கே" இது முதலடி மிக்கது. "பூண்ட பறையறையப் பூத மருள, நீண்ட சடையா னாடுமே, நீண்ட சடையா னாடுமெஃப, மாண்டசாயன் மலைமகள் காணவே காணவே" இது இடையடி குட்டம்பட்டு இறுதியடி மிக்கது. கந்திருவமார்க்கத்தான் இடைமடக்கி நான்கடியுமாம். "வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை, பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை, நீனிற வண்ணநின் னிறைகழல் தொழுதனம்" இது மூன்றடியிற்குறையாதது. "பிறையணிந்த சடைமுடியோன் பிஞ்ஞகன் பெம்மான், கறையணிந்த கண்டத்தான் கைலைக்குழுலத், இறையணிந்த நெஞ்சினோர்க் கின்றாம் பிறவி; இம்மைப் பிணியு மியலும் பசியொடு, தம்மைத் துறந்திடுந் தாவில் புகழுளதாம்" இது மூன்றடியிற்றதன்மே லீரடியிக்குவந்தது. "சதுர்முக வொருவ னின்சர ணடைந்தே, முதிர் பிரு நீரு ளமூழ்ந்து மிவ் வங்க காவாய், திருவுறு கிலைமைத் தாய்ப் போவெத னக் கூறிநிற்ப, எதிர்வண ரிருகையு மசைத்துறக் கூப்பிநிற்பார்" இது நான்கடியாய் முதலடி குறைந்தது. "தனுவெழு வரிவையைத் தருமணம் புணர்ப்பின், முனிவுறு தொழிலினை மூனா, னணிதவிர்த் திலர்க்கிடு நாடொறும்டோறுங், கனிவென வினியண்முன் கலந்தமற் றவற்கே" இது இரண்டாமடி குறைந்துவந்தது. "கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கல்வித் துறைபயந்த காமர்காட்சி, நல்லானை நல்லா னொருபாக மாகிய ஞானத்தானை, யெல்லாரு மேத்தப் படுவானை யெஞ்ஞான்றுஞ், சொல்லாதார்க் கெல்லாந் துயரல்ல இல்லைத் தொழுமின் கண்டீர்" இது ஈற்றயலடி குறைந்து, சீரடியாசிரியத்தான் கோடிமுன்னிறுமென்ற விலக்கணக் கொச்சகம்வந்தும் பாவின் வேறுபட்டதாம். "வண்டணிகொண்ட மதுமலர்க்கொன்றை பிணைமாலை கொண்டணி செஞ்சடைக் கோட்டிளந் திங்கள்போலப், பண்டணி யாகப் பலர்தொழுஞ் சங்கைநீர் வைத்தா, னுண்டணி கொண்டநஞ் சுண்பார்க் கமிழ்தாகுமே" இது அளவடியிரண்டு மைஞ்சீரடியிரண்டும் வந்தது. "கண்டெழுப் பாவைதனிக்காம் பிடிப்பாராயிற், கொண்டவற்பேணிக் குடிக்கு விளக்காகும், தென்றெழுநி னெஞ்சமே தன்னைநீங்கிப்போய்......மற்றொரு குழகன் றன்னையே" இது முதலடி மிக்கது. "போதுறு முக்குடைப் பொன்னெயி லொருவன், றிருவடி தாமரை யடிசேர், தாதுறு தாமரை யடியடைந் தாரொனிற், றீதுறு தீவினை யிலரே" இது சிலவடிகுறைந் திடைமடக்கிப் பிறவாறுமயிற்று. இவை யளவடியின்வேறுபட்டவாறுங்காண்க. "கடாமுங் குருதியுங் கால்வீழ்த்த பச்சைப், படாமும் புலித்தோலுஞ் சாத்தும் பரமு, விடாமுண்ட நெற்றியா னெஞ்ஞான்றுங் கங்கை, விடாமுண்ட வார்சடையான் வெண்ணெஞ் றுளிர்தான், மெய்யுறு கோயில்கொ வேறோ பிறப்பில்லை,

யையுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை." "வேயே திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம், வாயே வளர்பவள மாந்தளிரே மாமேனி, நோயே முலைசுமப்ப வென்றோர்க் கருகிருந்தா, ரேயோ விவளொருத்தி பேடியோ வென்றார், எரிமணிப்பூண் மேகலையார் பேடியோ வென்றார்" (சிந்தா-652) இவை நான்கடிச்செய்யுளிற்றபின் ஈற்றடி யிரண்டும், ஒன்றும் மிக்குவந்தன. "மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத், தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து, சோவரணும் [1]போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த, சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே, திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே;" "பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம், விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந், திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய, கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே, கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே;" "மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங், கடந்தானை நூற்றுவர்பா னாற்றிசையும் போற்றப், படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது, நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே, நாராய ணாவென்னா நாவென்ன நாவே" (சிலப்-ஆய்ச்சி) இவை படர்க்கைப் பரவலாய் ஒருபொருண்மேன் மூன்றடுக்கி நான்கடியிற்றபின் ஓரடிமிக்குவந்தன. இவ்வாறே பத்தடுக்கியொருபொருண் மேற் பதிகப்பாட்டாய்வருவனவும் இதனு ளமைக்க. [2]"வெறியுறு கமழ்கண்ணி வே.... பின்" இது சிந்தடியான்வந்த ஈற்றடி குட்டம்பட்டது. "வாய்வதின் வந்த குரவையின் வந்தீண்டு, மாய மடமகளி ரெல்லீருங் கேட்டீர், ஆய மடமகளி ரெல்லீருங் கேட்டைக்க, பாய்திரை வேலிப் படுபொருணீ யறிதி, காய்கதிர்ச் செல்வனே கள்வனோ வென்கணவன், கள்வனோ வல்லன் கருங்கயற்கண் மாதரா, யொள்ளெரி யுண்ணுமிவ் வூரென்ற தொருகுரல்" (சிலப்-துன்ப) இது ஐந்தடிச் செய்யுண்முடிந்தபின் ஈரடிமிக்கது. [3]"கோழியுங் கூவின......வாய்" இது ஐந்தடியான்வந்து ஈற்றடி முச்சீரான் இற்று

1 போர்முடிய என்பதும் பிரதிபேதம்.

2 வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயினு, மூறவுற வருவன வரைப்பன வுரைப்பன்மற், செறிவுறு தொழிலினர் சிறந்தன ரிவர்நமக், கறிவுறு தொழிலரொன் றல்லவை சொல்லன்மின், பிறபிற நிகழ்வன பின். இஃதைந்தடியா யீற்றடியொன் றொருசீர்குறைந்துவந்த வேரொலிவெண்டுறை என்றார் யாப்பருங்கலவிருத்திகாரர்.

3 கோழியுங் கூவின குக்கி லழைத்தன, தாழியு ணீலத் தடங்கண்ணீர் போதுமினோ, வாழிசூழ் வையத் தறிவ னடியேத்திக், கூழை நனையக் குடைந்து குளிர்புன, லூழியு மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்" நாற்சீர் நாலடியான்வருவது கலிவிருத்தமென்று வரையறுத்துச்சொன்னார். இஃது ஐந்தடியால்வந்ததாயினும் ஒருபுடையொப்புமைநோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கப்படும். இஃது அவிநயனார் காட்டியபாட்டு, இதனைத் தரவுகொச்சகமென்பாருமுளர். என்பர் யாப்பருங்கலவிருத்திகாரர்.

அடிமீற்றின்கண் இருசீர்மிக்கது. திருவெம்பாவை வெட்டடியான் வந்திவ்வாறிற்றன. இக்காலத்து ஒருபோகுகளிற் றாவுந் தாழிசையும் இடைமிடைந்துவருமாறுகாண்க. பிறவும் வந்துழிக்காண்க. இவையெல்லாங் கொச்சகமாமென்று கூறுவர்புலவர். எ-று. இனி யிவ்வாறுவந்த கொச்சகங்களையெல்லா மொருவரையறைப்படுத்துப் பாத்தோறு மினஞ்சேர்த்திப் 1பண்ணிற்குத்திறம்போலப் பின்னுள்ள ஆசிரிய ரடக்குவர்; அதனை அகத்தியமுந் தொல்காப்பியமும் உணர்ந்த அவர்தங்கருத்தறிந்த ஆசிரியர் அவ்வாறடக்காமைக்குக் காரணங்கூறுவர். அவர் கூறுமாறு. "கொன்றை வேய்ந்த செல்வ னடியை......நாமே" ஈரடியான்வருதலின் வெண்செந்துறையென்பார்க்கு ஒருசீர்குறைவின்றிவருதலின் வெண்பாவிற் கினமாகாது கலிப்பாவினொருகூற்றிற் கினமாதலுஞ் சீரானுந் தளையானும் ஆசிரியத்திற் கினமாதலு முடைத்தென்றுமறுப்பர். இனிச் சந்தஞ் சிதைந்து புன்பொருளாய்வருவனவற்றைத் தாழிசையெனிற் றுழும்பட்ட வோசையும் விழுமிய பொருளுமில்லனவற்றிற் சப்பெயர்கூறின் முற்கூறிய தாழிசைகட்குஞ் சந்தஞ்சிதைந்து புன்பொருளாய் வருதலுரித்தாமாம். அதனான் அப்பெய ராகாதெனவு மறுப்பர். "கன்று குணிலா" (சிலப்-ஆய்ச்சி) இது வெண்டளையான்வருதலின் ஆசிரியத்திற்கினமாகாதென மறுப்பர். இனி இது நான்கடியான்வருமேற் கலிவிருத்தமா மென்பார்க்கு "செருப்புக் கிழித்து விழித்ததோர் நெற்றி, யுருப்பிற் பொடிபட் டுருவிழந்த காம, 2னருப்புக் கணையா னடப்பட்டார் மாதர், விருப்புச் செயுகின்றோ விரும்புகின் றூரோ" என்றதுகாட்ட வெண்டளை தட்டலின் வெண்டாழிசைக்கு இழுக்கின்மையுங் கலித்தளையின்மையிற் கலிக்கு இனமாகாமையுங் கூறிமறுப்பர். இனிக் குறளடியானுஞ் சிந்தடியானும் வருவனவற்றைச் சீரைவான் வஞ்சிக்கினமென்பார்க்கு அவை நான்கடியான்வருதலானும், பா வேறுபடுதலானுஞ் சீர் இயற்சீராதலானும் ஆகாதென்ப. குறளடிச்செய்யுண் மூன்றுவரிற் றுழிசையெனவுஞ் சிந்தடிச்செய்யுண் மூன்றுவாராவென வங்கூறின் அதற்கு மோர்காரணங்கூறலரிதென மறுப்பர்; பிறவு மிவ்வாறு ஒன்றற்கினமாயது ஒன்றற்கினமாயும்வருதலின் இனஞ்சேர்த்தலாகாதென மறுப்பர். இங்ஙனம் இனஞ்சேர்த்துதற்கரியவற்றைக் கலிப்பாவென அடக்கியது பெரும்பான்மை கலிக்கேற்றவோசையே பெற்றுவருதலின். இத் தொல்காப்பியம் "முந்து நூல்கண்டு முறைப்படவெண்ணி" (தொல்-பாயிரம்) நூல்செய்தலின் எல்லாவற்றிற்கு மொரு பரிகாரங்கொடுத்துக் கொச்சகத்து

---

1 பண்களையும் அவற்றின்றிறங்களையும் "பண்ணுங் கிளையும் பழித்த ...ஞ்சொல்" என்னும் சிலப்பதிகார வூர்காண்காதையடிக்கு அடியார்க்கு நல்லாருரைத்த விசேடவுரையிற் கண்டுகொள்க.

2 "கருப்புக்கணை" என்பதும் பாடபேதம்.

லடக்கினர். அது மேற்சொல்லிவந்தமரபு. இனிப் பொருள்வேறுபடுதலா வன, தேவபாணியைப் பாட்டுடைத்தலைவனாக்கிக்கூறலுஞ் சுட்டியொருவர்ப்பெயர் கொளப் படுதலும், புறப்பொருளொடு தொடர்தலும், முற்கூறியபொருள்கள் பிற வாறு வருதலுமாம். இங்ஙனம் பொருள்வேறுபடுதலின் இதனுள் ஓதிய காண்கற்கும் யாப்புவேறுபட்டவற்றிற்கும் பொது வெட்சிமுதற் பாடாண் டிணையீறாகிய பொருள்வேறுபாடுவகையாற என்னை; அவை முற்கூறிய இரண்டற்கும் உரித்தாகலின்; அது பெரும்பான்மை பாணிச்செய்யுட்கு இடைவிராய்வரும். இவ்வாறு கொச்சகத்தினை வரைந்தோதவே ஆசிரியமும் வெண்பாவும் ஒருபொருண்மேற்பல மூன்றும் ஐந்தும் ஏழும் ஒன்பதும் பத்துமாகிவருதலும் பிறவாறேய்வருதலும் வரையறையிலவாயின. அவை ஐங்குறுநூறு, முத்தொள்ளாயிரம், கீழ்க்கணக்குமுதலியவற்றுள்ளும் பிற வற்றுள்ளுங்காண்க. தேவபாணியில்லாச் செய்யுளெல்லாம் யாப்பும்பொரு ளுஞ் சோவேறுபடுமென்றுணர்க. அது முற்கூறியவற்றுட்காண்க. "வெண் பலிச் சாந்த முழுமெய்யு மெய்பூசி, யுண்பலிக் கூரூர் திரிவது மேலிட்டுக், கண்பலிக் கென்று புகுந்த கபாலிமுன், னெண்பலித் தாளிவளை யாதுவாய் வாளே." இது "காமப் பகுதி கடவுளும் வரையார்" (தொல். புறத் உஅ) என்ற பாடாண்டிணையாகலின் பொருள் வேறுபட்டது. 'கன்றுகுணிலா' (சிலப்- ஆய்ச்சி) என்பது அங்ஙனந் திருவிளையாடல்தெய்வத்தைப் பாடியவழிச் சிறந்தவையாவது. இவை பலவுறுப்பிழுக்கனவேனும் கொச்சகவொருபோ கென்னும் பொது விலக்குண்ணுமையாற் பொதுப்பெயரல்லாவற்றிற்கு மாகுமென்று எய்துவித்தார். ஆகுமென்றதனான் ஒருபோகென்றது சிறு பான்மை கொச்சகமென அழுங்குதலாமென்றுகொள்க. (கசக)

கருO. ஒருபான் சிறுமை யிரட்டியத னுயர்பே.*

இது, அதிகாரத்தானின்றனவற்றுள் இறுதிநின்ற அடக்கியலின்றி யடிநிமிர்ந்த கொச்சகவொருபோகிற்கு அளவுகூறுகின்றது.

இ-ள். ஒழிந்தகலிக்கெல்லாம் உள்ளுறுப்புப்பற்றி யளவுகூறினர். பத் தடியிற் குறுங்காது இருபதடியினேறாதுவரும் அடக்கியலின்றி அடிநிமிர்ந் தொழுகுமென்ற கொச்சகவொருபோகு எ-று.

இது முன்னடிநிமிர்ந்தொழுகுமென்றதற்கோர் வரையறைகூறி ஐய மகற்றியது. இச் சேர்ப்புழிக்கோடலென்பதனானும் அதுவென்ற ஒருமை யானுங் கொண்டது. உ-ம். "தடங்கடற் பூத்த தாமரை மலராகி, யடங் காத முரற்சியா னருமறை வண்டிசைப்ப, வாயிர வாராழி யவிரிதழின்

*எ-து, மேலதற்கோர்புறனடையுணர்......ற்று. மேற்சொல்லப்பட்ட கொச்சகவொருபோகு பத்தடிச் சிறுமையாகவும், இருபதடிப் பெருமை யாகவும் வரும் எ-று. எ-இ உரையாசிரியருரை.

கருஉ. எருத்தே கொச்சக மாரகஞ் சிற்றெ
ணடக்கியல் வாரமோ டந்நிலைக் குரித்தே.*

இது முன்னர்க்கூறிய அம்போதரங்கவுறுப்பு இவையைந்துமெனக் கூறியவாறு.

இ-ள். தரவுங் கொச்சகமும் அராகமுஞ் சிற்றெண்ணும் அடக்கியல் வாரமுமென ஐந்துறுப்புடையது அம்போதரங்கவொருபோகு எ-று.

(தரவெனினும் எருத்தமெனினும் ஒக்கும்.) பலகோடிபட அடுக்கியுடுக்கும் உடையினைக் கொச்சகமென்பவாகலின், அதுபோலச் சிறியவும் பெரியவும் விராஅயடுக்கியுந் தம்முளொப்பவடுக்கியும் வருஞ்செய்யுளைக் கொச்சகமென்றார். இது ஒப்பினாகியபெயர். இக்காலத்து இது மகளிர்க்குரியதாய்க் கொய்சகமென்று வழங்கிற்று. இது முறையே சுருங்கிவரும் எண்ணுப்போலாது அடியுஞ் சீருந் தளையும் வேறுபட்டுவருமென்றுணர்க. வெண்பாவாகிற் பெரும்பான்மை அராகமாயது அறுதுகடுகிச்சேறல். பிறிதொன்றுபெய்து ஆற்றவேண்டுந்துணைச்செய்யதாகிய பொன்னை அராகித்ததென்பவாகலின் இதுவும் ஒப்பினாகிய பெயர்; மாத்திரை நீண்டுந் துணிந்துவராது குற்றெழுத்துப்பயின்று உருண்டுவருதலின். சிற்றெண்ணுவது; நால்வகையெண்ணினும் இறுதிநின்ற எண்வாரமுற்கூறிற்று. உ-ம். "செஞ்சுடர் வடமேரு விருமருங்குந் திரிகின்ற, வெஞ்சுடரு மதியமும்போல் வேலொடுகே டகஞ்சுழல, மாயிருமணிப்பீலி மயிலெருத்திற் றோன்றுங்காற,

*என்பதுமது. அம்போதரங்கத்திற் குறுப்பாமாறுணர் . . . ற்று. ஈண்டெருத்தென்பது தரவு, கொச்சகமும் அராகமும் என்று சொல்லப்பட்டன. எண்ணினுட் பேரெண்ணிற் சிற்றெண்வரப்பெறுமாயின் இனிச் சொல்லப்பட்ட அறுபதிறுப்பும் முறையான்வருதலும் மயங்கிவருதலுங்கொள்க. பரிபாடற்கு இவைதாமே யுறுப்பாய் அதனோடிதனிடைவேறுபாடென்னையெனின், அறுபதிற்றடியிற் குறைந்துவரின் அம்முறை பிறழ்ந்துவருமெனவும், ஒத்துவரின் அறுபதின்மிக்குவருமெனவுங் கொள்ளப்படும். உ-ம். [1]"கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்றத், தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும், வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு, மன்னவை பிறவும் பன்மலர் துதையத், தழையுங் கோதையு மிழையு மென்றிவை, தைஇயினர் மகிழ்ந்து திளைவிளை யாட, மடமொழி யாயத் தவரு ளிவள்யா ருடம்போ, டென்னுயிர் புக்கவ ளின்று" தரவு. ஓஒவிவள், பொருபுக லல்லேறு கொள்பவ ரல்லாற், றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா, வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ், சொல்லாற் றாப்பட் டவள்; சொல்லுக, பாணியே மென்றா ரறைகென்றார்

1 முல்லைக்கலி—உ.

சேயொளி கடற்பிறந்த செந்தீச் சிறகெறிப்ப, மறுவருந்தம் மனத்து வகைக் கலுழ்ச்சியான் வளர்த்தெடுத்த, வறுவருந்தம் மூலைசுரந்தாங் ககல் விசும்பு சிலதுவற்ற, ஆருருவத் தெயின்மூன்று மொருங்கவித்தோன் வியப் பெய்த, வீருருவத் தொருபெருஞ்சூர் மறுங்கறுத்த விகல்வெய்யோய்; ஆங்க, வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத், தனைவரும் தத்த மறம் புரிந் தாங்கு, மூனையடு கொற்றத்து முன்னோன் குருவிற், கனைகடல் சுட்டன னண்; தேவரு மக்களுஞ் சிற்றத்தா னஞ்சாமைக், காவல் புரியுங் கதிர்மதி போலு, மூவிரு தோன்றன் முகம்; மடமகள் வள்ளி மணிக்கம் பலம்போ, விடையிடை சுற்றுத லின்றுந் தவிரா, தொடையமை தார்கடம்பன் றோன்; அவ்வழி, யடியிணை சேரா வவுணரை நங்கிப், பொடிப்பொடி யாகிப் பொருப்பொடு மாய, விடியுமிழ் வானத் திடைநின்று கூடங், கொடியணி கோழிக் குரல்; விழுச்சி ரமரர் விசும்பிடைத் தோன்றிப், பழிச்சினின் றூர்த் தார் பலர்; உருகெழு முருகிய வுருமென வதிர்தொறு, மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்; பெருகிய வருமறை பெறுநெடு மொழியொடு, பொரு ள வழியிசை புகல்வன சிறுகுறள்; சிவந்தன திசை சிலம்பின மலை, நியந் தன தலை நிரம்பின குறை; ஆர்த்தன மறை யாடினர் பலர், போர்த்தன நகன் பொழிந்தனர் மலர்; ஆங்கனந் தோன்றிய வலிபோர் வென்றியின்,

---

பாரித்தார், மாணிழை யாருகச் சாறு; சாற்றுள், பெடையன்னார் கண் பூத்து நோக்கும்வா யெல்லாம், விடைபெறி னேனர் தகைத்து". இவை கொச்சகம். "தகைவகை றிசைதிசைப் பாய்மா ஈர்த்துட, னெதிரெதிர் சென்றார் பலர்; கொலைமலி நிலைசெறி செயிர் சினஞ்சிறந், துருத்தெழுந் தோடின்று மேல்; எழுந்தது துகள், ஏற்றது மார்பு, கவிழ்ந்தன மருப்புக், கலங்கினர் பலர்; இவை சிற்றெண். அவருள் மலர்மலி புகலெழ வலர்மலி, தருமணி புலாசிமிர் தோள் பிணைஇ, எருத்தோ டியிலிடை தோன்றினன் றோன்றி, வருத்தினன் மன்றவவ் வேறு;" முடுகியலடிவந்த கொச்சகம். "ஏற்றெவ்வங் காணு வெழுந்தா லெவன்கொலோ, வேறுடை நல்லார் பகை; மடவரே நல்லர்யா மக்க ளெனருளை, யடலேற் றெருத்திறுத்தார்க் கண்டு மற் றின்று, முடலேறு கோட்சாற்று வார்" இவையுங் கொச்சகம். "ஆங் கினித், தண்ணுமைப் பாணி தளரா தெழூஉகன், பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித், திண்டோட் டிறலொளி மாயப்போர் மா மேனி, யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த, முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி, மன்றம் பரந்த துரை. (கலி கஉ.) இது.........பிறவும் இன்னதாங்கொள்க. யாப்பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சகவொரு போகை அதன்பினனரோதினமையான் இதற்குங் காமப்பொருண் மேற் பட்டது. ௱௪௯-து. உரையாசிரியருரை.

றைந்தும் அடியிறந்தும் பாவகை சிதைந்தும் ஒருபொருணுதலியும் வெண்பாவியலான்வந்தனவுங் கலியோசையவென்றுணர்க. இதனுள் ஒருபொருணுதலியது கட்டளையாய்த் திரிவின்றிவருமெனவும் ஒருபொருணுதலாதது நேர்வகையாய்த் திரிவுடைத்தாய்வருமெனவுங் கூறிற்றும். உ-ம். "அரும் பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப், பிரிந்துறை சூழாதி யைய விரும்பி நீ, யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின், மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண், சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா, தொழிந் தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா, இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார், வளமை விழைதக்க துண்டோ வுளநாள், ஒரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை, யொன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினு, மொன் றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ, சென்ற விளமை தரற்கு" (கலி. கஅ.) இது பன்னீரடியான்வந்து ஒருபொருணுதலிய கட்டளைக் கலி வெண்பா. இதனுட் பெண்டன்மைக்கு ஏலா நுண்பொருளினைத் தலைவனையிரங்கினுணர்த்துவான் செவ்வன்கூறாது தலைவன் பண்டுகூறின சில சொற்றலைவாங்கிக்கொண்டு கூறுங் கூற்று. நீ மறந்தாயென்பது யாம் உணர்த்துகின்றனம் இவளென்பது படைத்தன்மையின் ஒருபொருணுதலிற் றாயிற்று. அது அகப்பொருளேயாமாறும் ஒழிந்தபாக்களும் அவ்வாறுவருமேனும் அங்ஙனம் நுதலியபொருளான செய்யுள் வேறுபடாமையின் ஆண்டு ஆராய்ச்சியின்று. இது வெண்பாவாயிற் குறித்தபொருளை மறைத்துக்கூறாது செப்பிக்கூறல்வேண்டும். இஃ தன்னதன்றிப் பொருள்வேறு

---

ாம்; வெண்கலிப்பாவென்றதென்னையெனின், புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை, பெருந்திணையெனவுஞ் சொல்லப்பட்ட பொருள் எழனுள்ளும் யாதானுமொருபொருளைக்குறித்து வினைக்கலிப்பாக்கள்போலத் தரவும், தாழிசையும் தனித்தனி பொருளாகச் சுரிதகத்தாற் தொகுத்துவரு நிலைமைக்கண்றித் திரிவின்றிமுடிவது; அதனைக் கலிவெண்பாவெனவும், புறப்பொருட்கண்வரும் வெண்பாக்களைப் பஃறொடைவெண்பாவெனவும், பரிபாடற்குறுப்பாய்வரும் பஃறொடைவெண்பாக்களைப் பரிபாடலெனவும், கொச்சகக்கலிப்பாவிற் குறுப்பாய்வரும் பஃறொடைவெண்பாவைக் கொச்சகக்கலிப்பாவெனவும் கூறுதலின் அது ஆசிரியர் கருத்தென்று கொள்க. அன்னதாக "நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே" (செய். ககஅ.) என்னும் யாப்பினுள் வேறுபடுத்தாரோவெனக் கைக்கிளை பரிபாட்டங்கதச்செய்யுளெனப் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்தோதினமையானுங் கொள்க. இனி, முல்லைக்கலியுள் "நீஇ பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந், தாம்பிற் பிணித்து மனைக்கொண்டு யாய்தந்த, பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப், பாங்கரு முல்லையுந் தாய பாட்டங்காற் றோழியெம், புல்லினத் தாயர் மகளிரோ டெல்லாம்,

படுதலானுந் துள்ளிவருதலானுங் கலிவெண்பாட்டாயிற்று. "மரையா மரல்கவர" (கலி. ௯.) என்னும் பாட்டுப் பதினோரடியான் ஒரு பொருணுதலிற்று. நூற்றைம்பதுகலியுட் கலிவெண்பாட்டு எட்டு. அவற்றுள் ஒருபொருணுதலிவருவனவற்றின்பொருள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் இயலென்றதனாற் பன்னீரடியி னிகந்து ஒரு பொருணுதலிவருவனவும் அங்ஙனம் வந்து தளை விரவி வருவனவுங்கொள்க. "சுடர்த்தொடீ கேளாய் தெருவினு ளாடும்" (கலி. ௫௧.) என்னும் பாட்டு அடியிகந்து ஒருபொருணுதலியது. "கயமல ருண்கண்ணாய் காணா யொருவன், வயமா னடித்தேர்வான் போலத் தொடைமாண்ட, கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு, முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற, நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும், பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வாயிற், சேயேன்மன் யானுந் துயருழப்பே னாயிடைக், கண்ணின்று கூறுத லாற்றா னவனாயிற், பெண்ணன் றுரைத்த னமக்காயி னின்னாதூஉங், காணான் கழிதலு முண்டென் றொருநாளென், னாணெகிழ் வுற்ற துயராற் றுணிதந்தோர், நாணின்மை செய்தே னறுநுதா லேனை, விளக்கிளி யாங் கடிந் தோம்பும் புனத்தய, லூசலூர்ந் தாட வொருஞான்று வந்தானை, யைய சிறிதென்னை யூக்கி யெனக்கூறத், தையா னன்றெனன் றவனூக்கக் கைநெகிழ்பு, பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின் வாயாச்செத், தொய்யென வாங்கே யெடுத்தனன் கொண்டான்மேன், மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் னாயிடை, மெய்யறிந் தேற்றெழுவே னாயின்மற் றொய்யென, வொண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பி, [1]னங்க ணுடைய னவன்" (கலி. ௩௭.) இது தையா னன்றென்று என மெய்யினும் பொய்யினும் வழிநிலைபிழையாமற் றோழி தலைவிக்குரைத்தது. இதுகேட்டுத்

---

மொருங்கு விளையாட வவ்வழி வந்த, குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன் மற் றென்னை, முற்றிழை யேர்மட நல்லாய்நீ யாடுஞ், சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ, பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப் பாய், கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய், தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய, கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ, யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப், பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா, யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற், றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர், செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது, மையலை மாதோ விடுகென்றேன் றையலாய், சொல்லிய வாறெல்லா மாறுமா றியான் பெயர்ப்ப, வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ, யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும், யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற, நோயுங் களைகுவை மன்" (கலி. ௧௧௧.) என்னும், இம் முல்லைக்கலிவெண்பாவினுட் பிறதளைவருதலிற் பிறதளையானும் வந்த கலிவெண்பா. எ-று. உரையாசிரியருரை.

---

1 "நம்மேமலே ஒரு கண்ணோட்டமுடையன்" என்ற வுரையானு [illegible] பாடமாதல் காண்க.

தலைவன் தன்னை நயந்தானென இவள்கருதினாள்போலுமெனத் தலைவி கருதுமாற்றாற் றோழிகூறியவாறும் இதனானே தலைவி யினிக் காந்தொழுகி உடம்படுக்குமென்பது மொருபொருளாயிற்று. இது "அறக்கழிவுடையன" (தொல். பொருளி. உக.) என்னும் பொருளியற்சூத்திரத்தில் வழுவமைத்தவாறுங் காண்க. "தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந், தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த, பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப், பாங்கரு முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம், புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா, மொருங்கு விளையாட வவ்வழி வந்த, குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை, முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ், சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ, பெற்றேம்யா மென்று பிறர் செய்த வில்லிருப்பாய், கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிய, தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய, கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ, யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப், பேதையை மன்ற பெரிதென்றே னாயிழா, யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற், றொய்யிலெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர், செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது, மையலை மாதோ விடுகென்றேன் றையலாய், சொல்லியவாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப, வல்லாந்தான் போலப் பெயர்ந்தானவனைநீ, யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும், யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற, நோயுங் களைகுவை மன்" (கலி. ககக.) இது தளைவிரவி யைஞ்சீரடியும் வந்து ஒரு பொருணுதலாதது. "இடுமுணைவேலி" (கலி. கஉ) என்னும் பாட்டுத் தளைவிரவி யவ்வாறுவந்தது. பாவகை சிதைந்தன வந்துழிக்காண்க. ஒன்றெனமுடித்தலாற் பொருள்வகைசிதைதலுங் கொள்க. அவ்விரண்டுஞ் சேரச் சிதைந்தன இக்காலத்தார் கூறுகின்ற உலாச்செய்யுளாம். இனி யிக்காலத்தார் கூறும் மடற்செய்யுளும் பாவகை சிதைவின்றேனும் 1"ஏறிய மடற்றிறம்" ஆகிய பெருந்திணைப்பொருளாகலின் அதனைக் கலிவெண்பாட்டென்று கோடும். மேலிற் சூத்திரத்தாற் கூறுங் கலிவெண்பாட்டுக்களும் பெருந்திணையாயும் வருதலின்; இதனை வெண்பாவெனிற் றொல்காப்பியனார்.............. ..கலிவெண்பாப் பெருந்திணைப்பொருளின்வாராதென்றுகொள்க. "வெண்பா விதியான் விரவுறுப்பின்றித், தன்பா வகையொடு பொருந்திய பொருளே, யொன்றுவிளங்கற்ற விறுதித் தாகும்" என்று இசைநூலினும் இவ்வாறேயோதிக் கொச்சகச் செய்யுளுமுளவென்றார். இதனுள் விரவுறுப்பின்றியென -வேண்டாது கூறியவதனால் விரவுறுப்புடையது வேறுபொருள்விளையாதெனவும், விரவுறுப்பில்லது வேறுபொருள்விளைத்து இறுமெனவும் அவ்வாறே விரவுறுப்பில்லாக் கலிவெண்பாட்டும் வேறுபொருள் விளக்குமென ஈண்டுக்கூறி விரவுறுப்புடையது "வெண்பாவியலான் வெளிப்படத்தோன்று"மென்று மேலைச்சூத்திரத்தாற் கூறுகின்றார். (கருங)

1 அகத்திணையியல் ருச.

